# குமரகுருபரன்



மலர் 13] சுபகிருது-௵ சித்திரை-மீ 1ம்-௳ (14-4-62) [இதழ் 4

தனிப் பிரதி 13 நயா பைசா வருடச் சந்தா ரூ. 1¾

# ஆசிரியர் குழு



## உள்ளுறை

உ

சிவமயம்

திருச்செந்திலாண்டவன் துணை

குமரகுருபரன்

மலர் 13 ‖ சுபகிருது-ஞு சித்திரைத் திங்கள் 1-ம்வ [14-4-62] ‖ இதழ் 4

# சிதம்பரச் செய்யுட் கோவை

## மாணிக்கவாசக அடிகள்

[ கட்டுரை 56 ]

தில்லையிலே சிதம்பரத்திலே திருக்கூத்தியற்றும் ஒருத்தனும் அவன்பால் நின்று அத்திருக்கூத்தைக் கண்டு நிற்கும் ஒருத்தியும் ஓராண்டில் இருமுறை திருவீதியுலா வருதல் இக்காலத்து நிகழ்ச்சி. முற்காலத்தில் எத்தனை முறை வந்தருளினரோ ? ஆண்டுதோறும் ஆருட்டும் நிகழும். திருநாள் ஆறனுள்ளும் திருவீதியுலா நிகழ்ந்திருக்கலாம். எண்ணெய்ச் செலவு துருக்கர் அழிப்பு முதலிய வற்றை நோக்கி, இத்துயரம் மிக்க காலத்தில் நாம் காட்சிதரல் ஏற்றதன்று என்று திருவுளங் கொண்ட கடவுளர் பற்பலர் மண்ணடியுள் மறைந்து வாழ்தலை அறியாதார் எவர்? சிலர் அங்கே புதை பொருளாகக் கிடைத்தார்.

இங்கே வெளிப்பட்டார் என்றெல்லாம் செய்தித் தாள்களில் வெளி வரக் காண்கின்றோம். தில்லையம்பதியில் ஆறுநாள் திருவீதியில் எழுந்தருளிய திருக்கூத்திறைவரும் தன்னனந்தக் கொடியும் இரண்டே நாள் இக்காலத்தில் எழுந்தருள்வது நாம்பெற்ற (பெருந்தவப்) பேறேயாகும். அவற்றுள் ஒருநாள் நிகழ்ச்சி இது:-

நடராசப் பிரானும் சிவகாமி யன்னையும் திருவீதிக்கு வர அவ்விருவரது திருவுலாக் காட்சியைச் செல்வம் நிறைந்த உயிர்கள் பெற எழுந்தருளினர். இருவரும் வெள்ளையெருதின் மேற் செல்லும் தோற்றம், எவர்க்கும் மீண்டும் உடலோடு தோற்றம் இல்லை எனச் செய்யும் திருவருட்செயலே யாகும்.

அஞ்சனக் கண்ணும் தாமும் அணிதில்லைச் செஞ்சடைக் கூத்தனுர் வெள்விடை மேற் சேறலும், அங்கே தெருவில் விளை யாடிக்கொண்டிருந்த இளம் பெண்டிர் கூட்டத்துள் ஒருத்தி, உள்ளம் நெகிழ்ந்து உருகிக்கொண்டே வந்தாள். அக்கூத்தனுர் எதிர்ப்பட்டாள். அவள் அழகிய ஒரு பாவையைப்போன்றவள். உச்சிக் கொண்டையில் தழையுடன் கலந்து தொடுத்த கண்ணி (மாலை)யைச் சுற்றிய அழகினுள். பச்சைக் கிளிப்பிள்ளைக்கும் அவளுக்கும் சிறிதும் வேறுபாடு இல்லை. அன்னவள் சின்னப் பெண்ணுயிருந்தும், என்னப்பனைக் கண்டாளே, ! தன் அம்மை யைப் பார்த்தாளே ! வாளா இருந்தாளா? உடையான் எவ் வுயிரையும் தனக்கு அடிமையாக உடையான் உடையாள் எவ்வுலகையும் ஆளுடையாள். உடையானையும் உடையாளையும் தன் கண்ணிரண்டாலும் பிணித்துக் கொண்டாள். கருத்தில் இருத்தி வைத்தாள். உலகின்ற ஒருத்தியும் அவள் காண நிருத்தம் ஆடும் ஒருத்தனும் அவள் கருத்தில், மிக்க பொருத்தம் ஆன உறையுள் என இருத்தலை ஆர் அறிவர்? அவனை மட்டும் உள்ளச் சிறையில் வைத்தனள் என்பதே இங்கு உணரத்தக்கது.

மனச் சிறையில் இருந்தும் மணிமன்றுடியை மறைத்தற்கு எவரால் எவ்வாறு இயலும்? அவன், அவள் உள் இருப்பதை உலகம் அறியச் செய்யும் எண்ணத்தால், அவள் கை நிறைய அணிந்திருந்த வளையல் எல்லாம் நன்றியறிவில்லார் போல அகன்றன. எவ்வாறு அகலும் வளைகள்? அவை உள்ள அளவிற் குறையுமோ? கைகளின் மெலிவால் வளையல்கள் அகன்றன

போலத் தோன்றிக் கையினின்றும் அகன்றன. ஆடைகளும் சோர்ந்தன. அவ்வளையலுக்கும் ஆடைக்கும் அபயஹஸ்தமும் வரத ஹஸ்தமும் அளிப்பார் இலர். நிலையின் இழிந்தன.

உள்ளப் புணர்ச்சி (உள் அப்பு உணர்ச்சி) உடம்புறு புணர்ச்சி என்னும் இருவேறு புணர்ச்சியுள் முதலான உள்ளப் புணர்ச்சியில் ஒரு சிறிதும் குறைவில்லாதவரையினும், உடலுறு புணர்ச்சி இல்லாதது பெருங்குறையாயிற்று அவட்கு. அதனுல் அவள் கண்களில் நீர் பெருகிற்று. கண்ணும் மையுண்ட கண். கருத்தும் திருநின்ற செம்மையுண்ட கருத்து. அருகில் இருந்த மகளிர் சிலர் தம்கைகோத்துக்கொண்டு, அப்புணர்ச்சியிலேயே உணர்ச்சியை வைத்த அவளை எடுத்துக் கொண்டு சென்றனர். வீட்டில் விட்டனர். வீடு பேரின்பவீடு அன்றேனும், அவட்கு மட்டும் பேரின்பவீடே. பசிய குளிர்ச்சிமிக்க ஒரு பூடு பரப்பி அதன் மேற்படுத்துக் கிடக்கச் செய்தனர். நீருட் குளிப்பினும் குன்று ஏறி ஒளிப்பினும் சுடும் காதல் வெப்பம் அப் பூட்டுக் கிடக்கையால் ஓட்டுறுமோ; தண்ணிய பசிய பூட்டுப் படுக்கையில் கிடத்தியது, செய்ய வெய்ய தீயிற் கிடத்தியது போன்றிருந்ததாம். அவள் படுந்துன்பம்தீர அம்மகளிர் சீர் செய்வது போர் செய்வதாயிற்ரும். நன்று நன்று என்று நனிமகிழ வேண்டியிருக்க நன்று அன்று அன்று, இது கொடிது கொடிது என்று கூச்சல் இட்டாள். அவள் இட்டகூச்சலைச் செவிமடுத்த ஆசிரியர், 'அன்னைமீர், செந்திப்பிழம்பிற் கிடத்திச் செருச் செய்வது அந்தோ கொடிது கொடிது என் செய்தீர்' என்று வெளியிட்டார் அதனை. அச்சின்னப் பெண், காதலுக்கு உற்ற முக்கண்ணன் சின்னங்களுள் ஒன்ரே சிலவோ பெற விரும்பினுள். அவ்விருப்பம் புதியதாயினும், அதன்முற் கொண்ட பழைய விருப்பத்தைத் தணிக்கும். அதனுல், திரிபுரம் எரித்த விரிசடைக் கடவுள் அவ்வெரியுள் ஒரு சிறிது என்னுள்ளத்தில், அவன்மீது கொண்ட காமத்தீயாக்கிவிட்டான். அத் தீயைத் தணிக்க, அவன் அணியும் குளிர்ந்த கொன்றைமாலையைக் கொண்டுவந்து கொடுங்கள் என்ருள்.

மாலையை மாலை நீக்கக் கேட்ட அப்பொன் மாலைக்கு உடனிருக்கும் மகள் ஒருத்தி கூறிய விடை :– ''மின் தந்த

நுண்ணிடையாய்! எங்கோன் விரைத்தொங்கல், தன் தந்தை தாள் எறிந்தாற்கு (சண்டேசுரர்க்கு) அன்றித்தாரான்." இங்கே அறியத்தக்க உண்மையாவது இது:- "தாதையைத் தாள் அற விசிய சண்டிக்கு இவ்வண்டத்தொடும் உடனே பூதலத் தோரும் வணங்கப் பொற்கோயிலும் போனகமும் அருளிச் சோதி மணிமுடித்தாமமும் நாமமும் தொண்டர்க்கு நாயகமும் பாதகத் துக்குப் பரிசுதந்தானுக்கே பல்லாண்டு கூறுதுமே". என்னும் திருப்பல்லாண்டு கூறும் பல்லாண்டவரேசைவர்.

அவ்விடையைக் கேட்டாலும் அது காமக்கருத்தை நிறுத் தும் தடை ஆய்விடுமோ? கோபத்தைச் சிந்தை கடல்மடை திறந்த பெருக்கமாக்கிற்று. மாலை இன்னார்க்கே உரியது. மின்னார்க்கு வாயாது என்றவள் சொல், மிக்க சினத்தை விளைத் ததால், இச்சின்னப் பெண்ணின் பெரிய பித்தை அறிந்து வைத் தும் 'நான் செவ்வி அறியாது உரைத்தேன் இதனை' இது என் குற்றமே என்றாள் இவ்வாறு தன் தோழிக்குச் சொன்னாள்.

தொடலைக் குறுந்தொடித் தோகாய்நம் பாவை
படலைச் சிறுமுச்சி யுச்சிப் பசுங்கிள்ளை
பேதைக் குழாத்தொடு நென்னற் பொழுதின்கண்
வீதிக்கே நின்று விளையாட் டயருங்கால்

அஞ்சனக் கண்ணளுந் தாழு மணிதில்லைச்
செஞ்சடைக் கூத்தனார் வெள்விடைமேற் சேறலும்
உண்ணெக் குருக வெதிர்ப்பட் டுடையானைக்
கண்ணிற் பிணித்து மனத்திற் கொடுபுக்

கிறைவளை சிந்த வணிதுகில் சோரப்
பிறரறியா வண்ணம் புணர்ந்தும் புணராள்போல்
மையுண்கண் ணீர்சோரச் சோர்தலும் வார்குழலார்
கைகோத் தெடுத்துக் கடிமனை கொண்டுய்ப்பப்

பைந்தண் குளிரி படுத்துக் கிடத்தலும்
செந்தீப் பிழம்பிற் கிடத்திச் செருச்செய்வ
தந்தோ கொடியதுகொடி தென்செய்தீ ரன்னைமீர்
பொன்னஞ் சிலையே சிலையாய்ப் புரமெய்தான்

(தொடர்ச்சி 237-ம் பக்கம் பார்க்க

# திருவலம்புரம்

வித்துவான், ஸ்ரீ முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் அவர்கள்,
திருப்பனந்தாள், ஸ்ரீகாசிமடம்.

புகலிட மறிந்தேன்.

பசுக்கள் (ஆன்மாக்கள்) பிறவிதோறும் நிலையான தங்குமிடம் தேடி அலைந்து எய்த்தொழிகின்றன. ஆன்மாவை (உயிரை) நோக்கிப் "புக்கில் அமைந்தின்று கொல்லோ" என்று எள்ளி நகையாடுகிறுர் பொய்யா மொழியார். நகை மொழியேனும், 'உயிர்க்கு இந்த உடல் நிலைத்த வீடல்ல, நிலைத்த வீடு வேறென்றுண்டு' என்பதை நல்லுயிர்கள் உணரக்காரணமான அம்மொழி மெய்ம்மொழியாகிறது. அந்நல்லுணர்ச்சி 'உயிர்க்கு நிலைத்த வீடு எது' என்பதை ஆராய்ந்து அதனை அடைவதில் முயற்சியும் வேட்கையும் ஊட்டுமல்லவா? மாணிக்கவாசகர்:

'புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் எம்பெருமான்
மெய்யேயுன் பொன்னடிகள் கண்டின்று வீடுற்றேன்'

என்று இறைவன் திருவடியே உயிர்கள் அடைய வேண்டிய நிலையுடைய வீடென்றும், அதுவே கள்ளப்புலக்குரம்பை கட்டழிக்க வல்லதென்றும், அல்லற் பிறவி அறுப்பதென்றும் கூறுகிறுர். சுந்தரரும்,

'எனக்கினித் தினைத்தனைப் புகலிட மறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்

எனக்கினி யவன்தமர்க் கினியவ னெழுமையும்
மனக்கினி யவன்தன திடம்வலம் புரமே'

என்று மனமினிக்கப் பாடுகிறுர்.

'ஊனம ராக்கை யுடம்புதன்னை யுணரிற் பொருளன்று
தேனமர் கொன்றையி ஞனடிக்கே சிறுகாலை யேத்துமிஞே
ஆனமர் ஐந்துங்கொண் டாட்டுகந்த அடிகள் இடம்போலும்
வானவர் நாடொறும் வந்திறைஞ்சும் வலம்புர நன்னகரே''

என்று பாடுகிறுர் சம்பந்த சுவாமிகளும்.

'புகலிடமின்றி எய்த்த நாம் புகலிடம் எது என்பதை அறிந்தோம். எங்கே இருக்கிறதென்று அறியும் வேட்கையும் உடன் எழுமல்லவா?

எங்கே ?

காவிரிப்பூம்பட்டினம் செல்லும் வழியில் திருவலம்புரம் இருக்கிறது. இதற்குத் தென்மேற்கே தலைச்சங்காடும், வடகிழக்காகப் பல்லவனிச்சரம் திருச்சாய்க்காடு என்னும் தலங்களும் இருக்கின்றன.

வரலாறு :

நூல் வாயிலாக இத்தலத்திற்கு வரலாறு ஏதும் கிடைத்திலது. எனவே செவிவழிச் செய்தியாக அறியப்பெறும் செய்திகள் சில இங்கே எழுதப்பெறுகின்றன. இவை மேலும் விரிவும் தெளிவும் பெறத்தக்கன. இதன் வரலாற்றுச் சிந்தனை வலஞ்சுழியிலிருந்து தொடங்குகிறது.
ஏரண்ட முனிவர்.

மகாசிவராத்திரி நாளிலே வலஞ்சுழி வாணனை வாழ்த்தி வழிபட எண்ணினுன் ஆதிசேடன்; பிலத்தின் வழியாக வந்து வழிபட்டான்; அப்பிலத்திலே சென்ற காவிரி வெளிப்போந்திலது. சோழ மன்னனும் மக்களும் வருந்தினர்; இறைவனை வேண்டினர். 'சடை தரித்தவரோ அன்றி முடிதரித்தவரோ இப்பிலத்தில் தன்னைத் தியாகம் செய்வார்களாளுல் காவிரிமீண்டும் தோன்றும்; அன்றி எவ்வாவற்ருலும் இயலாது' என்று அசரிரி

எழுந்தது. அரசன் செய்வதியாதெனத் திகைத்தான். இச் செய்தி கொட்டையூரில் தவஞ் செய்துகொண்டிருந்த ஏரண்ட முனிவர் செவிக் கெட்டியது. தவத்தின் உருவாக என்பும் பிறர்க்குதவும் அன்பின் திருவுருவாகத் திகழ்ந்த முனிவர் பிலத் தினுள் இறங்கினர். காவிரியும் வலமாகச் சுழிந்து வெளிப் போந்தது.

காவிரியின் போக்கிலே முனிவரும் வலம்புரத்தின் அருகிலே காவிரியின்கண் வெளிப்பட்டார்; அவ்விடமே வலம் புரம்; அங்கேயே இறைவனை வழிபடுவாரானர். அல்லல் அருள் ஆள்வார்க்கு இல்லையல்லவா! அருள் சேர்ந்த நெஞ்சினர்க்கு இருள் சேர்ந்த இன்னு உலகம் புகுதலும் இல்லையல்லவா? முனிவர் வலம்புரத்திறைவன் திருவடிக்கீழ் நிலையான வீடு பெற்று வாழ்கிருர். முனிவர் திருவுருவினை அங்கே காணலாம். பிலத்தில் இறங்கிய முனிவர் முடியில் உண்டான பள்ளம் இறைவன் திருமுடியிலும் விளங்குவதாயிற்று. தன் சீரடியார் சிறப்பினைக் குன்றின் மேலிட்ட விளக்காக வெளிப்படுத்துவது அவன் கடமையல்லவா?

காவிரியின் சிறப்பு.

காவிரியின் சிறப்பை விளக்கும் வரலாறு ஒன்றும் இங்கே பேசப்படுகிறது. தட்சிணத்தை ஆண்ட அரசன் தன் கடைசி விருப்பமாகத் தன் மகனிடம் இறந்தபின் தனது அஸ்த்தியைக் கங்கையில் சேர்க்கும்படி கூறுகிருன். தந்தையின் விருப் பத்தை முடிக்கத் தனயனும் அஸ்த்தியுடன் பயணமானுன். வலம்புரத்தை அணுகியபோது இறைவன் அந்தணவடிவோடு அவன் முன்தோன்றி அஸ்த்தியைக் காவிரியில் நனைத்து இறைவன் திருவடியில் சேர்ப்பிக்குமாறு கூறுகிருர். அரசன் அஸ்த்திகளைக் காவிரியில் நனைத்தபோது அவை செங்கழுநீர் மலர்களாயின. மீண்டும் அவைகள் ஆலயத்தெதிரில் உள்ள அஸ்த்தி தீர்த்தத்தில் நனைத்தபோது அஸ்த்திகளாகவே ஆயின. இறைவன் திருவடியில் சேர்க்கும்போது மறுபடியும் மலர்களாயின. இந்நிகழ்ச்சி காவிரியின் புனிதத்தை விளக்க நிகழ்ந்த திருவிளையாடலன்ருே! இன்றும் விருத்தாசலம்

என்னும் தலத்திலுள்ள தீர்த்தத்தில் இடப்படும் அஸ்த்திகள் சின்னுளில் கல் உருவாகமாறுவதைக் கண்கூடாகக் காணலாம், என்ற செய்தி ஈண்டு நினைவுகொள்ளத் தக்கது.

மற்ருெரு செய்தி.

கற்பின் மாட்சியையும், தொண்டர்தம் பெருமையையும் அன்னதானத்தின் சிறப்பையும் விளக்கத் தக்க மற்ருெரு வரலாற்றுச் செய்தியும் இங்கே நிகழ்ந்திருக்கிறது. சான்ருகச் சித்திரம் ஒன்றும் பிரகாரத்தில் எழுதப்பெற்றிருக்கிறது.

கற்பின் மாட்சி.

ஏழை அந்தணன் ஒருவன் இறந்தான். "தெய்வம் தொழா அள் கொழுநற் ருெழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" என்ற குறளுக்கு இலக்கியமாக வாழ்ந்த கற்பின் மாட்சி மிக்க அவனது மனைவி பலர் தடை செய்தும் கைம்மை வாழ்வை விரும்பாது கனவனுடன் உடன் கட்டை ஏறினுள். இதனை அறிந்தான் சோழமன்னன். தன் பட்டத்து அரச பத்தினியையும் சோதிக்கக் கருதினுன். காட்டுக்கு வேட்டையாடச் சென்ற போது விலங்குகளால் அரசன் கொல்லப்பட்டான் என்று அரசியிடம் கூறுமாறு அமைச்சனுக்கு ஆணைதந்தான். 'இச்செய்தி அறியின் அரசியின் உயிர் தங்காது, அதனுல் பெண் கொலைப் பழியும், பத்தினியை சோதித்ததால் வரும் பழியும் தங்கும்' என்று பல்லாற்ருலும் அமைச்சர்கள் அரசர்க்கு எடுத்துக்கூறியும் கேளாத அரசன் அதனுல் எத்தகைய பழிவரினும் தான் ஏற்றுக்கொள்வதாகக் கூறினுன். அரசன் ஆணைப்படி அமைச்சனும் அரசியிடம் செய்தியினைக் கூறினுன். செய்தியினைக் கேட்டபோதே அரசியின் உயிரும் நீங்கிற்று.

அறிந்த அரசன் வருந்தி இப்பழிக்குக் கழுவாய் யாதென ஆகம வல்லுநர்களை வினவினுன். அவர்களும் இந்தத் தலத்தில் லக்ஷம் அந்தணர்களுக்கு அன்னமிட்டால் தோஷம் நீங்கு மென்றனர். அப்படியே செய்ய அரசன் ஆணையும் தந்தான். அன்னம்பாலிப்பு நிகழ்ந்து கொண்டிருக்கிறது - லக்ஷம் அந்தணர்க்கு அளித்து முடியவில்லை-தோஷமும் நீங்கவில்லை. இந்த

நிலையில் சிவஞானச் செல்வரான பட்டினத்தடிகள் அன்னச் சாலையில் சென்று பசியோடு உணவு கேட்டார். லக்ஷம் அந் தணர்க்கு அன்னமிட்ட பின்னரே ஏனையோர்க்கு அன்னமளிக்கப் படுமென்று அறிவிக்கப்பட்டார் அடிகள். அடிகளின் தோற்றப் பொலிவையும் பசியின் கொடுமையையும் உணர்ந்த பரிசாரகர் ஒருவர் காவலருக்குத் தெரியாமல் அடிகளுக்கு அன்னமிட முயன்று காவலன் சீற்றத்திற்கு ஆளாகிறார். அப்பால் சென்ற அடிகள் அன்னச்சாலையின் பின்பக்கத்தில் ஓடிய சோறுவடிக்கப் பட்ட கஞ்சியைச் சிறிது அள்ளிப் பருகினார். அதே சமயத்தில் மணியோசை தானே எழுந்தது. அரசனது தோஷமும் நீங்கிற்று. காரணம் அறிந்த பின்னரே அடிகளையும் அடிகளின் தன்மையை யும் உணர்கிறான் அரசன். 'அன்னம் அளித்தல் சிறந்தது, அதிலும் அந்தணர்க்கு அளித்தல் சாலச்சிறந்தது, அதிலும் சிவஞானி ஒருவருக்கு - எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண் டொழுகும் அறவோர் ஒருவருக்கு - அளித்தலால் மிக்க புண்யம் விளையும்' என்று அரசன் உணர்ந்தான்.

## தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே.

ஆக்கூரில் தான்தோன்றி யீசன் ஆயிரத்து ஒருவர். தில்லை யிற் கூத்தனே மூவாயிரத் தொருவர். வலம்புரத்தில் பட்டினத்துப் பிள்ளையாரோ லக்ஷத்து ஒருவரானார் என்று உணர்கிற போது 'தொண்டர்தம் பெருமை சொல்லவும் பெரிதே' என்ற அம்மை யின் அமுத மொழியினை நினைவு கொள்ளாமல் இருக்கமுடியுமா?

## உண்டிகொடுத்தார் உயிர் கொடுத்தாரே.

தானங்கள் எல்லாவற்றிலும் தலையாவது அன்னதானமே. எனவேதான் முற்காலத்துப் பெருஞ் செல்வர்களும் அரசர்களும் ஊர்கள் தோறும் சத்திரங்களும் மடங்களும் அமைத்து அன்ன தானம் செய்ய ஏற்பாடு செய்துள்ளனர். சோறுமணக்கும் மடங் களெல்லாம்' என்ற பெரும் புலவர் வாக்கும் நினைக்கத்தகும். திருவள்ளுவப் பெருந்தகையாரும், 'தாமும் பசித்துப் பிறரையும் அது தீர்க்க மாட்டாத தவத்தான் வலியாரினும், தாமும் பசியாது பிறரையும் அது தீர்ப்பார் ஆற்றல் மிக்கது' என்று கூறுவாராய் 'ஆற்றுவார் ஆற்றல் பசியாற்றல் அப்பசியை, மாற்றுவார்

ஆற்றலின் பின்' என்று கூறுவாராயினர். அடுத்து இரண்டு குறள்களால் உண்டியளித்தலின் சிறப்பைக் கூறிப் 'பொருட் குறையை நிரப்பவேண்டி வறியார்க்குக் கொடாது தானே தனித் துண்போர் பிறர்பாற்சென்று யாசிப்போரினும் இழிபுடையர்' என்று அளியாதார் இழிபு கூறினர். மேலும், தவத்தினும் தானமே சிறந்ததென்பது வான்சிறப்பென்ற அதிகாரத்துத் 'தானம் தவம், இரண்டும்' என்ற குறளில் தானத்தை முன் கூறியதனாலும் அறியலாம். தானம் என்பது எல்லாத் தானங் களுக்கும் பொதுவாயினும் அன்னதானமே சிறந்ததென்பது திருவள்ளுவர் கருத்தென்பது இக்குறளால் உணரலாகும். மழை பெய்யாதாயின் முதலில் பாதிக்கப்படுவன உணவுப் பொருள் களன்றே. பசியை 'அழிபசி' என்றும், பசியென்னும் 'தீப்பிணி' யென்றும் குறள் கூறுகிறது. மணிமேகலை யென்னும் பௌத்த காப்பியம் பசியின் கொடுமையைக் கூறிப் 'பசிப்பிணி யென்னும் பாவி அது தீர்த்தோர் இசைச்சொல் அளவைக்கு என்நாநிமிராது' என்றும் 'உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோரே' என்றும் கூறு மாயின் உண்டி அளித்தலின் சிறப்பை மேலும் விளக்க வேண்டுமோ - விளக்கத்தான் முடியுமோ?

திருமால் சங்கு பெற்றது.

இவ்விறைவனைத் திருமால் வழிபட்டு வலம்புரிச் சங்கு பெற்றதாகவும் வரலாறுண்டு. இதனை இறையகத்தின் பின் பக்கம் அண்ணாமலையார் (பொங்கழல் உருவன்) இருக்க வேண் டிய இடத்திலுள்ள திருமால் உருவம் மெய்ப்பிப்பதாகும். திருமால் தலைச்சங்காட்டிறைவனை வழிபட்டுப் பாஞ்சசந்யம் என்னும் சங்கத்தைப் பெற்றதாக அங்கே வரலாறு பேசப்படு கிறது. வலம்புரத்திலே பெற்றது சக்கரமென்று கூறுவாரு முளர்.

பெயர்க் காரணம்.

திருமால் வழிபட்டு வலம்புரிச் சங்கு பெற்றதால் வலம்புர மெனப்பட்டது. தான்தோன்றியாக (சுயம்புவாக) உள்ள இறைவன் திருமுடியில் பெரும்பள்ளம் உண்டென்பதை முன்னரே கண்டோம். அது பற்றி இவ்வூர் 'பெரும்பள்ளம்'

என்று வழங்கப்படுகிறது. (இறைவன் மேல் பெரும்பள்ளம்-மேலே பெரும்பள்ளம்-மேலைப் பெரும்பள்ளமாகி அதனை மேற்கே உள்ளதென்று கொண்டு, கிழக்கே உள்ள பகுதியைக் (கீழைப்) பெரும்பள்ளம் என்று வழங்குகின்றனர் போலும் என்று எண்ணவும் இடமுண்டு.) இறைவன் மேல் பெரும்பள்ளம் உள்ள காரணத்தால் எப்போதும் தாமிர கவசம் அணிவிக்கப்பெற்றே அபிஷேகம் அலங்காரம் செய்யப்பெறுவதைக் காணலாம். ஆண்டுக்கு ஒருமுறை - தைமாதம் இரண்டாவது வெள்ளிக் கிழமை - கவசம் களைந்து சந்தனத் தைலம் சாத்தப் பெறுவதாக அறிகிறோம்.

பிற செய்திகள்.

இறைவன் பெயர் வலம்புரிநாதர். இறைவியின் பெயர் வடுவகிர்க் கண்ணம்மை. மற்றுமுள்ள படிமங்களில் பிக்ஷாடன மூர்த்தி படிமம் சுந்தரமானது. ஐந்துகாலம் நித்தியவழிபாடு நடைபெறுகிறது.

தல விருக்ஷம் பனை மரம். இதனைப் பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்...........வலம்புரமே; 'பனைபழம்படும் இடம், சடசட விடுபெணைபழம்படும் இடம் என்ற சுந்தரர் வாக்காலும் அறியலாம். இங்கே இறைவன் வன்னியடியில் தவம் செய்ததாகவும் கூறப்பெறுகிறது. சான்றுகப் பிராகாரத்தில் வன்னி மரமும் உண்டு. இங்கே முல்லைக் கொடியையும் காணலாம்.

மூவர்.

தேவாரம்பாடிய மூவரும் இத்தலத்துக்கு வந்து இறைவனை வழிபட்டுள்ளனர். திருஞானசம்பந்த சுவாமிகள் பாடிய பதிகம் ஒன்று; அப்பர் சுவாமிகள் பாடிய பதிகம் இரண்டு; சுந்தர மூர்த்திசுவாமிகள் பாடிய பதிகம் ஒன்று; ஆக நான்கு பதி கங்கள் உள்ளன.

திருஞானசம்பந்த சுவாமிகளுடன் தலயாத்திரை செய்த அப்பர் சுவாமிகளை இத்தலத்திறைவன் தாமே வரவழைத்துக் காட்சி கொடுத்தாரென்பதற்கு

" மண்ணளந்த மணிவண்ணர் தாமும் மற்றை
மறையவனும் வானவருஞ் சூழ நின்று
கண்மலிந்த திருநெற்றி யுடையா ரொற்றைக்
கதநாகங் கையுடையார் காணி ரென்றே
பண்மலிந்த மொழியவரு மியானு மெல்லாம்
பணிந்திறைஞ்சித் தம்முடைய பின்பின் செல்ல
மண்மலிந்த வயல்புடைசூழ் மாடவீதி வலம்புரமே
புக்கங்கே மன்னி ஞரே "

"வாவா வெனவுரைத்து மாயம்பேசி வலம்புரமே புக்கங்கே மன்னிஞரே" என்ற அப்பர் சுவாமிகளது வாக்கு அகச்சான்று களாக அமைவனவாகும்.

மேற்கண்ட பதிகத்தின் கடைசிப் பாடலில்; 'திருமால் இலங்கைக்குச் சேதுபந்தனஞ் செய்து வில்லெடுத்துச் சேனை யோடுஞ்சென்று இலங்கை புக்குப் பொங்கு போர் பலசெய்து இராவணனை வென்ருர். சிவபெருமானே போர் செய்தலில் வல்ல அவ்வரக்கனின் நெடு முடிகள் பொடிபடும்படி தன் கால் விரலைச் சற்றே ஊன்றி அடர்த்தார்; பின் அருளலும் செய்தார். இங்ஙனம் அடர்த்தலிலும் அருளலிலும் வல்ல சிவபெருமான் மரக்கலங்கள் (கப்பல்கள்) நிறைந்த கடலால் சூழப்பட்ட மாட வீதிகளையுடைய வலம்புரத்தில் நிலைபெற்றுள்ளார். அவரைச் சென்று காண்மின்' என்று பாடுகிருர். இதோ பாடலைக் காணுங்கள்,

" செங்கண்மால் சிலைபிடித்துச் சேனை யோடுஞ்
சேதுபந் தனஞ்செய்து சென்று புக்குப்
பொங்குபோர் பலசெய்து புகலால் வென்ற
போரரக்கன் நெடுமுடிகள் பொடியாய் வீழ
அங்கொருதன் திருவிரலால் இறையே யூன்றி
யடர்த்தவற்கே அருள்புரிந்த அடிக ளிந்நாள்
வங்கமலி கடல்புடைசூழ் மாட வீதி
வலம்புரமே புக்கங்கே மன்னி ஞரே "

சோழர்காலக் கல்வெட்டுக்கள் பல உள்ளன. கல்வெட் டாய்வாளர்களும் வரலாற்று வல்லுநர்களும் ஆராயின் மேலும்

தலவரலாறு விளக்கமும் விரிவும் பெறலாம். ஆராய்பவர் ஆராயட்டும்.

"....   ....   ....   ....வலம்புரத் தடிகள் தம்மை
நானடைந் தேத்தப் பெற்று நல்வினைப் பயனுற்றேனே"

என்ற அப்பரது வாக்குக் கேற்ப நானடைந் தேத்தப்பெற்று நல்வினைப் பயனுற்றேன். நீங்களும் நல்வினைப்பயனுற வேண்டு மென்பதுவே அப்பர் சுவாமிகள் போன்ற பெரியோரின் விருப்பம். பதிகங்களைச் சிந்தித்துப் பற்றுங்கள் பதியை.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு" – குறள்.

வாழ்க உலகெலாம்!

---

(முன் 228-ம் பக்கத் தொடர்ச்சி)

தண்ணென் கடுக்கை கொணர்ந்தாரோ தம்மினென
மின்றந்த நுண்ணிடையா யெங்கோன் விரைத்தொங்கல்
தன்றந்தை தாளெறிந்தாற் கன்றித் தரானென்றேற்
கன்றே பகைநோக் களித்தாண்மற் றம்ம
சிறியாள் பெரும்பித் தறிந்திருந்துஞ் செவ்வி
அறியா துரைத்தே னது.



(தொடரும்)

# HYMNS OF THE TAMIL SAIVITE SAINTS

BY

F. KINGSBURY, B. A. (Madras)

AND

G. E. PHILLIPS, B. A. (Lond.), M. A. (Oxon.)

---

[மலர் 13. இதழ் 3-ன் தொடர்ச்சி]

## I

## SAMBANDAR

(Tamil: TIRU JNANA SAMBANDAMURTI SWAMI)

17. சடையாயெனுமால்சரணீயெனுமால்
விடையாயெனுமால்வெருவாவிழுமால்
மடையார்குவளைம்மலரும்மருக
லுடையாய்தகுமோவிவளுண்மெலிவே.

Associated with the hymn from which our next verse is taken is a story of the author, Sambandar, helping a sorrowing woman by raising to life the man she loved, who had been killed by snake-bite. The hymn makes no allusion to such a miracle, but it does give an example of intercession on behalf of another, an element which is somewhat rare in these devotional books.

17. Prostrate with fear at Thy feet she cries 'Lord with matted hair, my Refuge, Rider of the bull !' Lord of Maruhal where fresh water-lilies bloom, is it right to leave her in this anguish of heart?

(To be Continued)

---

# மதுரைக் கலம்பகம் உரைநடை

தருமபுர ஆதீன வித்துவான்,
"திருவண்ணுமலை ஆதீனவிரிவுரையரசு, மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர், சித்தாந்தப் புலவர்மாமணி, பாலகவி"
வயிநாகரம், திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
தேவகோட்டை.

[மலர் 13. இதழ் 3-ன் தொடர்ச்சி]

அம்மாநம் மேலன்று பட்ட தருட்கூடற்
பெம்மான்மேற் பட்ட பிரம்படியே—யிம்முறையும்
இம்மேனி காமநோய்க் கீடழிந்த வாவடிகள்
செம்மேனிக் குண்டாங்கொல் தீங்கு. 57

கருணையையுடைய கூடலம்பதியிலே எழுந்தருளியுள்ள சொக்கேசப் பெருமான் திருமேனியின் மேல் அரிமர்த்தன பாண்டியனுல் அடிக்கப் பெற்ற பிரம்படியே அந்த நாளில் நம் மேல் பட்டது. இந்த எனது உடம்பு காமநோயின் காரணத்தால் வலிமை கெட்டிருப்பதனுல் இப்பொழுதும் அக்கடவுளினது சிவந்த திருமேனிக்குத் திமை உண்டாகியிருக்குமோ?

குரும்பை வெம்முலை சேர்மது ரேசர்பொற்
　　கோபு ரத்திற் கொடிகட்டு சித்தர்யாம்
கரும்பை முன்புகல் லானைக் கிடுஞ்சித்தர்
　　கையிற் செங்கல்ப சும்பொன்ன தாக்கினேம்
இருந்த வீடும் வறும்பாழதா மவர்க்
　　கெருத்துக் கொட்டிலும் பொன்வேய்ந் திடச்செய்தோம்
அருந்த னந்நமக் கோதன மேயப்பா
　　ஆட கத்துமற் ருசையவ் வையர்க்கே. 58

தென்னங் குரும்பையை யொத்த விருப்பத்திற் கிடமாகிய கொங்கைகளையுடைய உமாதேவி சேர்ந்த மதுரை நாயகராகிய சொக்கேசப் பெருமானது பொன்மயமான கோபுரத்தின் மேலே கொடி கட்டுகின்ற சித்தர்கள் நாங்கள். முன் ஒரு நாளில் கல்யானை தின்னும்படி கரும்பைக் கொடுத்தருளிய சித்தராகிய சொக்கேசப் பெருமானது கையிலே உள்ள சிவந்த கல்லைப் பசுமையாகிய பொன்னாகும்படி செய்தோம். தாம் குடியிருந்த வீடும் ஒன்றுமில்லாத சூனியமாக இருந்த அவருக்கு எருதுகட்டு கின்ற கொட்டகையையும் பொன்கூரை வேயும்படி செய்தோம். நமக்கு அருமையான பொருள் சோறேயாகும். அப்பனே! அந்தத் தலைவருக்குப் பொன்னில் ஆசை இருக்கின்றது (சொக் கேசப் பெருமானது கையில் வில்லாகவுள்ள சிவந்த மேருமலை யைப் பொன்னாகச் செய்தோம். தாம் எழுந்தருளி யிருக்கும் இடத்தைச் சிதாகாசமாகக் கொண்ட அவருக்கு இடபமாகிய திருமாலின் மனைவி இலக்குமியாக இருக்கும்படி செய்தோம். நமக்கு உண்ணும் உணவு சோறேயாகும். அப்பனே! அந்தத் தலைவருக்கு ஆடரங்கில் ஆசை இருக்கிறது).

ஐய மணிக்கல மென்பணியே
அன்பணி யக்கொள்வ தென்பணியே
மெய்யணி சாந்தமும் வெண்பனியே
வேண்டு வதுங்கொள வெண்பனியே
எய்ய வெடுப்பதோர் செம்மலையே
ஏந்தி யணைப்பதோர் செம்மலையே
வையகம் வாய்த்தவ ளம்பதியே
வாழ்வது கூடல்வ ளம்பதியே. 59

சொக்கலிங்க மூர்த்திக்கு அழகையுடைய இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற ஆபரணங்கள் எலும்பு மாலைகளே யாகும். அன்பு பொருந்த அவர் ஏற்றுக் கொள்வது எனது தொண் டையே யாகும். அவரது திருமேனியில் அணிந்து கொள்ளு கின்ற சந்தனமும் வெள்ளை நிறத்தையுடைய திருநீறேயாகும். அவர் வாங்கிக் கொள்ள விரும்புவதும் எள்ளத் தக்க பிச்சையே யாகும். முப்புரமெரித்தகாலத்தில் அம்பை எய்ய அவர் எடுத்தது ஒப்பற்ற சிவந்த மேருமலையேயாகும். அவர் விருப்பத்துடன்

தூக்கி எடுப்பது ஒரு முருகக் கடவுளாகிய மைந்தரையே யாகும். அவர் எல்லா உலகங்களையும் பெற்ற உமாதேவியின் கொழுநராவார். அவர் எழுந்தருளி யிருப்பது கூடலாகிய வள மிக்க திருப்பதியேயாகும்.

ஏடார் புண்டரிகத் திளமான் முதுபாடல்
எழுதா மறையோடு மிசைமுத் தமிழ்பாடப்
பீடார் கூடல்வளம் பாடா வாடல்செயும்
பெருமான் முன்சென்றாள் சிறுமா னென்சொல்கேன்
பாடா ளம்மனையு நாடா ளெம்மனையும்
பயிலாள் தண்டலையு முயலாள் வண்டலையும்
ஆடாள் மஞ்சனமும் தேடாள் அஞ்சனமும்
அயிலா ளன்னமுமே துயிலா ளின்னமுமே. 60

இதழ்கள் பொருந்திய வெண்டாமரை மலரில் வீற்றிருக்கின்ற இளமையான மான் போன்ற கலைமகள் முதிர்ந்த பாடலாகவுள்ள எழுதப்படாத வேதங்களோடு புகழ் மிக்க முத்தமிழ்ப் பாடல்களையும் பாடப் பெருமை பொருந்திய கூடலாகிய மதுரையம்பதியின் வளங்களைப் பாடிக் கொண்டு திருநடம் புரிபவராகிய சொக்கேசப் பெருமான் திருமுன்னர்ச் சிறிய மான் போன்றவளாகிய தலைவி சென்றாள். அதன் பின் நிகழ்ந்ததை என்னவென்று சொல்லுவேன்? அம்மானைப் பாடலைப் பாடாதவளாய் எந்த வீட்டையும் நாடிச் செல்லாதவளாய்ப் பூஞ்சோலைகளிற் சென்று பழகாதவளாய் விளையாட்டுக்களை முயலாதவளாய் நீராடுதலைச் செய்யாதவளாய்க் கண்ணுக்கு மை தீட்டுதலைத் தேடாத வளாய்ச் சோற்றை உண்ணுதவளாய் இன்னமும் தூங்காதவளாய் இருக்கின்றாள்.

இன்னியந் துவைப்பச் சங்கம்
ஏங்கிடச் செழிய ரீன்ற
கன்னியை மணந்தே யன்றோ
கன்னிநா டெய்தப் பெற்றார்
மின்னிவள் முயக்கும் பெற்றால்
வெறுக்கைமற் றிதன்மே லுண்டோ
கொன்னியல் குமரி மாடக்
கூடலம் பதியு ளார்க்கே. 61

சொக்கேசப் பெருமான் இனிமையான இசைக்கருவிகள் ஒலிக்கவும் சங்குகள் முழங்கவும் மலயத்துவச பாண்டியர் பெற்ற கன்னியாகிய தடாதகைப் பிராட்டியை மணம் புரிந்து கொண்டதனுலல்லவா கன்னிநாட்டை அரசாளும் உரிமை அடையப்பெற்ருர். பெருமைமிக்க நிலையான மாளிகைகளை யுடைய அழகிய கூடற்பதியிலே எழுந்தருளியுள்ள அந்தப் பெருமானுக்கு மின்னற் கொடிபோன்ற இந்நங்கையினது சேர்க் கையும் கிடைக்குமானல் இதற்கு மேற்பட்ட செல்வம் வேறு இருக்கிறதோ?

கேளார்பு ரஞ்செற்ற வின்ஞரி
தோயக் கிளர்ந்துற்றதோர்
தோளாளர் கூடற் பதிக்கேகு
முகில்காள் சொலக்கேண்மினோ
வாளாவொர் மின்னுங்கண் மழைசிந்த
வென்சொன் மறுத்தேகன்மின்
தாளாண்மை யன்றே தளைப்பட்ட
வூரில் தனித்தேகலே. 62

பகைவர்களாகிய அசுரர்களது முப்புரங்களை அழிப்பதற்குக் கருவியாயிருந்த மேரு மலையாகிய வில்லினது ஆதிசேடனுகிய நாணிபொருந்த அதனுல் விளக்கமுற்றதாகிய ஒப்பற்ற தோளை யுடைய சொக்கேசப் பெருமானது கூடற்பதியை நாடிச் செல்லு கின்ற மேகங்களே! நான் சொல்லுவதைக் கேளுங்கள். ஒரு மின்னற்கொடி போன்ற தலைவி விருகக் கண்ணீர் மழையைப் பொழியும்படி எனது சொல்லை மறுத்துச் செல்லாதீர்கள். முன் ஒரு காலத்தில் சிறைப்பட்ட ஊருக்கு நீங்கள் தனித்துச் செல் லுவது நல் முயற்சி யாகாது.

கண்டமுங் காமர் மெய்யுங்
கறுத்தவர் வெளுத்த நீற்றர்
எண்டரு மதுரை யிற்சிற்
றிடைச்சிபே ரிடைச்சி யென்பீர்
தொண்டைவா யமுதிட் டென்றன்
பாலிங்குத் தோயீர் வாளா
மண்டுமென் னகத்தி லென்னீர்
மத்திட்டு மதிக்கின் றீரே. 63

கழுத்தும் அழகிய இடப்பாதி யுடம்பும் விடமுண்டதனுலும் உமாதேவி யிருத்தலாலும் கருமையாக உள்ளவரும், வெண்மையான திருநீற்றை அணிந்தவருமாகிய சொக்கேசப் பெருமான் எழுந்தருளியுள்ள மெய்யடியார்களால் எப்பொழுதும் சிந்திக்கப் படுகிற மதுரையம்பதியிலேயுள்ள சிறிய இடையையுடையவராகிய பெரிய இடையர் குலத்திலே தோன்றிய மங்கை எனப் படுபவரே! கொவ்வைக் கனியை ஒத்த வாயில் உள்ள அமுதம் போன்ற ஊறலைத் தந்து என்னைக் கூடுவீராக. வீணுகப்பொருந் திய எனது மனத்தில் நீர் ஏன் மயக்கத்தைச் செய்து கலக்கு கின்றிர்? (பாலில் அமுதிட்டுத் தோய வைப்பீர். தயிரில்லாமல் வீணுக வறிய எனது வீட்டில் ஏன் மத்தை இட்டுக்கடைகின்றிர்).

ஈர மதிக்கு மிளந்தென் றலுக்குமின் றெய்யுமதன்
கோர மதிக்குங் கொடுங்கோ லுளமேகொடுங் கோன்மை முற்றும்
தீர மதிக்குஞ்செங் கோன்மையென் ருஞ்சில தேவர்மதி
சோர மதிக்குங் கடற்றீ விடங்கொண்ட சொக்கருக்கே. 64

குளிர்ச்சியையுடைய சந்திரனுக்கும் மந்தமான தென்றற் காற்றுக்கும் இல்லாமல் மலரம்புகளை எய்கின்ற மன்மதனது அச்சந்தருகின்ற கரும்பு வில்லும் கொடிய அம்பும் என்னும் இவை மட்டுமே கொடிய தன்மை முழுவதும் நீங்கும்படி செலுத் திய நெறி தவருத ஆட்சித் தன்மை, சில தேவர்கள் விடவேகத் துக்கு ஆற்ருமல் அறிவு தளர அதனை ஒழித்தற் பொருட்டுக் கடையப்பட்ட திருப்பாற் கடலினின்றும் தோன்றிய விடத்தைத் திருவமுது செய்த சொக்கநாதப் பெருமானுக்கு என்ன சிறப்பு ஆகும்?

கரிய கண்டங் கரந்தவோர்
நிருபர் கூடலி னெஞ்சிரே
உருவ மும்பெண் ணுருக்கொலாம்
அருவ மென்பதென் ருவியே. 65

விடமுண்டதனுற் கருத்த நிலகண்டத்தை மறைத்த ஒப்பற்ற சுந்தர பாண்டியரது மதுரையிலே பற்றுவைத்த மனமே! எனது உயிரின் வடிவமும் பெண்வடிவம் போலும்! அவ்வுயிரை உருவ மில்லாத தென்று சொல்லுவது என்ன?

---

(வளரும்)

உ

திருச்செந்திலாண்டவன் துணை.

# ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு



[புதிய மலிவுப் பதிப்பு — 1961]

புதிய பதிப்பு பிரதி ஒன்றின் விலை ரு. 3–50 ந. பை. ஆகக் குறைக்கப்பட்டிருக்கிறது.

(முந்தின பதிப்பு பிரதி ஒன்றின் விலை. ரு. 6/–)

(தபால் கட்டணம் வேறு)

768 பக்கங்கள் கொண்டது. (128 + 621 + 19) உயர்ந்தரக வெள்ளைத்தாளில் பெரிய எழுத்தில் தெளிவாக அச்சிடப் பெற்றது.

டாக்டர். உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் எழுதிய குறிப்புரை, ஆராய்ச்சி, முதலியவற்றுடன் கூடியது.

ஒரே சமயத்தில் 5 பிரதிகளும் அதற்குமேல் வாங்குபவர்களுக்கும் 20% கழிவு உண்டு.

இதன் விற்பனைத் தொகை ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்தைச் சாரும்.

கிடைக்குமிடம்:–

ஸ்ரீ T. M. குமரகுருபரன் பிள்ளை அவர்கள் B. A., B. L.,
வழக்கறிஞர்
ஸ்ரீவைகுண்டம் P. O. :: (திருநெல்வேலி மாவட்டம்)

# VIJAYAWADA

## A SHORT HISTORY

SRI POLAVARAPU RAMACHANDRA RAO

Advocate, Vijayawada.

The history of Vijayawada makes a revealing peep into the past. Though archaeology, numismatics and epigraphy - the usual sources of history - are not able to furnish any unbroken account of the history of this city, nevertheless it is not impossible to construct a fairly acceptable history of it.

In the earliest cross sections of the history of Andhras, we come across frequent references to a place called 'Vijaya Puri' on the bank of the Krishna River, and at one time it was believed that this was none other than Vijayawada, but subsequent researches revealed that this was a city near Nagarjunasagar and was for a time the capital of the early Andhra Empire under the Ikshvaku kings. The factors that contributed to the misapprehension as to the identity of Vijayapuri with Vijayawada, were the proximity of the Krishna River, and a celebrated hill known as Sriparvata which gave the name of Sriparvatiyas to the ruling dynasty. Both Sriparvata and Vijayapuri are to be found in the Nagarjuna Konda inscriptions (Mr. B. V. Krishna Rao). Vijayapuri is mentioned in the Prakrit inscriptions of Amaravati. This City was, however, destroyed by the Pallavas.

---

Reproduced with the kind permission of the chairman of the Souvenir Committee of 'VIJAYAM'.

A Chinese pilgrim, Yuan Chwang, referred to Buddhist monasteries noticed by him in his travels, known as Aparasila and Purvasila monasteries. The identification of these monasteries created a problem for historians. Burgess, Fergusson and Swell identify these localities with sites at Bezwada. A Buddhist monastery flourished, according to Mr. B. V. Krishna Rao at Vijayawada as also at Ramathirtham and several other places and after the decline of Buddhistic influence the tantric Mahayana Goddess Tara was transformed into the Brahminical Goddess, Durga. It is decided by Historical researches, that during the period of rule by the Vishnukundin dynasty, (420 to 620 AC.) after the Ikshvakus, cave temples were, constructed at Mogulrajapuram in Bezwada. Undavalli in Tadepalli in the Guntur District and monuments at Bhairavaumkonda in the Nellore District. It is said that a certain king, Madhavavarman, reigned at Vijayawada, the capital of Vishnukundins. There is an inscription on the stone pillar placed in the temple of Malleswara Siva at Bezwada, which records an incident that occurred in Saka year 117. Madhavavarman's son accidentally killed the child of a woman who made a living by the sale of the tender shoots of the tamarind tree (Timirini Jivi). On a complaint by the helpless woman and after trial, the king sentenced his son to death. On seeing this God Malleswara Siva, established on the Indrakila hill, (the hill in Bezwada) was greatly pleased with Madhavavarman and showered a rain of gold on the city and revived the executed prince and the deceased child of the woman.

The 'lion symbol' is found on coins of this period of history i. e. during the days of the Ikshvakus-

Vishnukundins. But the 'Vase' symbol is to be found as a peculiar feature in the rock cut temples at Mugalrajapuram (Mudgalarajapuram) in Bezwada and Undavalli in the Guntur Dist. While Rapson, Elliot and others hold that the vase symbol is to be assigned to the Pallavas, Mr. B. V. Krishna Rao holds the contrary view and ascribes them to the Vishnukundins. Judging by the figure of a lion on some of the gold coins discovered in the course of researches and that of a storeyed edifice on the observe and by the occurrence of letters 'Ma' and 'Dha' on them, he believes that these coins point to the reign of Madhavavarman of Vishnukundin dynasty.

The five rock cut temples in Bezwada also furnish a side light. These are on the eastern and western slopes of the Indra Kiladri hill, i e. the one situated in the western half of the city. Of them, the 'Akkanna Madanna' mantapa is the largest and the best rock cut. There are again three temples at Mugalrajapuram, now a suburb of Vijayawada and again two more in the adjacent hills. These contain three shrine cells, each indicating that the shrines had been dedicated to the Hindu trinity. The origin of these temples is obscure. 'But' says Mr. Krishna Rao, 'it is clear that they sprang into existence during the period of militant revival of Brahminism and the decline of Buddhism some time after the fall of the Ikshvakus. The architectural style of these monuments plainly denotes that they were the work of the people who inherited the traditions of art and architecture of the Buddhists of the earlier Satavahana and Ikshuvaku epochs........ Therefore the rock cut temples on the banks of the Krishna and of the Nellore District seem to belong to

the period before Mahendravarman 1. Prof. Jouvean-Dubrieul believes that the rock cut shrines of Bezwada Mugalrajapuram and Undavalli were the work of the Vishnukundins. He is right in this conclusion.'

A Telugu copper plate inscription of King Vishnuvardhana III, who reigned from 719 to 755 A. D. the inscription of Gunaga Vijayaditya who ruled from 848 to 892, Ammaraja II, alias Rajamahendra (945-970), and the inscription of Yuddha Malla (927-934) mention Bezwada. These would suffice to dispel a popular conception that 'Bezwada' is a corrupt form of 'Vijayawada' used by alien rulers. Mr. D. V. Siva Rao, a great research scholar of the present day, is of the view that Vijayawada is a 'poetic variant' of Bezwada, used in literary works.

Coins of Satavahana kings, discovered in and around Bezwada, and a Roman Coin, found by Mr. Rea in 1888, prove that trade and commerce flourished in and around Bezwada even by the beginning of Christian era. Nagarjunakonda was the most famous Buddhist monastery that flourished in the Andhra Desa in the first century before Christ. Nagarjuna was the founder of the Madhyamika school of Mahayana Buddhism and was a great Scientist and scholar and the head of a University, that attracted pupils from Tibet, China and other distant lands. "The religious, cultural and commercial contacts of these times were largely shared by Bezwada." (Mr. Siva Rao)

Andhra Desa was under the influence of Jainism even before Christ and continued to be so till 1200 A. D. The Jains worshipped twenty four Thirthankaras as manifestations of Sakti. Their temples are called

'Vasathis' or Basthis and were situated in the most busy parts of towns. Consequently, the word Basthi has acquired the meaning in Telugu as the busy part of the town. The old town of Bezwada is often referred to as Bezwada Basthi. The copper plate inscription of Vishnuvardhana III (715 to 755 AD) refers to a Jain Math in Bezwada called 'Nadumbi Vasathi' meaning the 'intermediate link' in the chain of Jain maths of the period. The Masulipatam inscription of Ammaraja II, also known as Rajamahendra (945-970), also refers to the building of two Jain Bhavans in Bezwada and a village being granted for the same.

The Kakatiya Kings of Warangal were opposed to Jainism and destroyed it almost completely by demolishing the temples, killing the Jains or driving them to suicide. Several Jain temples were converted into Saivite temples. Worship of Siva and Sakthi spread throughout the state. Lands and gardens in and around Bezwada and in the villages of the Krishna District were endowed for these new temples and are still recognised as Durga Manyams.

Krishna Deva Raya of Vijayanagar visited the Durga temple at Bezwada as is evidenced by an inscription near the temple. A hall in honour of the deity is claimed to have been built by Akkanna and Madanna of Golkonda in about the seventeenth century. The same century witnessed Tavernier, the famous French traveller, passing through Bezwada and this latter has left for us a lengthy description of the shrine and the structures of the temple. Other Europeans who visited Bezwada have recorded their impressions of it as a prosperous small town. If a

legend is to be referred to in this context, it is worth noting that the name 'Vijayawada' was given to the town, in token of Vijaya i. e. Arjuna, the hero of the Mahabharata having performed penance here. As a matter of pre-history, it can be said that Indologists are of the view that the evidences furnished by glazed pottery in Mugalrajapuram and some excavations made assign it to the Neo-lithic period and that a very great city must have existed on the site of the present city of Bezwada and its environs.

The giant strides shown in the modern process of development of cities in general and in that of the city of Vijayawada in particular at the present day may possibly inspire a hope that Vijayawada may with its excellent advantages regain the eminent dimensions of the neolithic period of the indologists by entwining itself with Guntur.

I am much indebted to the late Mr. B. V. Krishna Rao, Advocate and former Commissioner for Hindu Religious Endowments, and my friend, Sri D. V. Siva Rao, Advocate and a first rank scholar in history, for their valuable contributions to the history of Bezwada from which I have derived much help in writing this article.



# பிள்ளைத் தமிழ்

திரு. மது. ச. விமலானந்தம் அவர்கள், எம். ஏ.,
தமிழ் விரிவுரையாளர்,
சரபோசி மன்னர் கல்லூரி, தஞ்சாவூர்.

எழுவாய் :

மறுமலர்ச்சி யுலகில் இலக்கியம் வளர்ந்து சிறந்துள்ள வகையினை எண்ணின், குழந்தை இலக்கியம் (Child Literature) என்றொரு வகைத் தனி இலக்கியமே உருவாகியுள்ளமை உணரலாம். குழந்தைகள் பயிலுதற்கான எளிய இனிய கவிதை-கட்டுரைகள் தீட்டுவதும்; குழந்தைகள் பற்றி நுண்ணிதின் ஆய்ந்தெழுதும் வகையும் சிறுவர் இலக்கியத்தில் அடங்கும். இங்ஙனம் குழந்தைகளை யொட்டியே ஒரு தனி இலக்கியம் வளரும் அளவிற்கு இற்றை நாளில் ஆர்வம் பிறந்துளது-பெருகி வளர்ந்துளது.

வித்து........!

இவ்வார்வம் இவ்விருபதாம் நூற்றுண்டில்தான் எழுந்துள்ளதாக எண்ணல் வேண்டா. மக்கட் செல்வத்தால் எய்திடும் மன நிறைவை, குழந்தை தரும் இன்பத்தை மாந்தி மகிழும் திறம் பண்டுதொட்டே பழந்தமிழர் மாட்டு உண்டு. இத்தகு இலக்கியத்திற்கு வித்து, சங்கத் தமிழில் உள்ளதெனலாம்.

வள்ளுவரே, ‘குழலினிது யாழினிது என்ப, தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்’ எனக் கூறியதோடமையாது ‘மக்கட் பேறு’ என்றொரு அதிகாரமும் வகுத்துள்ளார். அடுத்து பாண்டியன் அறிவுடை நம்பியினது புறப்பாட்டே குழந்தை தரு கொள்ளை இன்பத்தை அள்ளித் தந்து நிற்பதை அனைவரும்

உணர்வர். மக்கட் செல்வத்தில் மனதைப் பறிகொடுத்து மழலை இன்பம் மாந்தியதோடு அமையாது, பிள்ளைகளைப் பாடிப் பரவும் பெற்றியும் பிற்றைநாள் இலக்கியங்களில் அமைந்திடக் காண்கிறோம்.

ஊற்றுநிலை........!

பிள்ளைத் தமிழுக் கெல்லாம் ஊற்று நிலையாகப் பிறங்குவது பெரியாழ்வாரது திருமொழி யாகும். பிள்ளைமைப் பேரின்பத்தைப் பற்றி முதன் முதல் வரையறுத்துப் பாடிய பெருமை பெரியாழ்வாரையே சாரும். அவரது திருமொழியே பிள்ளைத் தமிழ் இலக்கிய வகைக்கு ஊற்றுநிலை எனலாம். இதனை முன்னோடியாகக் கொண்டவையே பின்னெழுந்த பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தங்கள் அனைத்தும். எப்படிக் குறம் குறவஞ்சியாக வளர்ந்ததோ, அதே போன்றுதான் பெரியாழ்வாரது பிள்ளைப் பேரின்பம் பற்றிய பனுவல்கள் பிள்ளைத் தமிழாக வளருநிலை பெற்றதெனலாம்.

நூல்........!

தமிழில் அமைந்த 96 வகைப் பிரபந்தங்களுள் பிள்ளைத் தமிழும் ஒன்றாகும். இதனைப் ‘பிள்ளைப் பாட்டு’ எனவும், ‘பிள்ளைக் கவி’எனவும் வழங்குவர். பாட்டுடைத் தலைவரையோ, தலைவியை-யோ குழந்தையாகப் பாவித்து, செவிலித்தாய் போன்றார், காப்பு முதலிய பத்துப் பருவங்களுக்குரிய செயல்களைச் சிறப்பித்துக் கூறுவதாகப் புலவர் பெருமக்களால் பாடப்பெறுவது தான் பிள்ளைத் தமிழ் இலக்கியமாகும்.

வகை :

பிள்ளைத் தமிழ் பல வகைத்து. கடவுளரையேனும், ஆசிரியரையேனும், வள்ளல்களையேனும், தொண்டர்களையேனும், குழந்தைகளாக வைத்துப் பாடுதல் வழக்கு. தத்துவங் கடந்த பரம்பொருளாம் சிவனைப் பிள்ளைமைப் பருவத்தில் வைத்துப் பாடுதல் வழக்கில் இல்லை. விநாயகர், முருகன், உமாதேவி, திருமால் முதலிய கடவுளரைப் பற்றிப் பிள்ளைத் தமிழ்கள் பல வுள. அனுமார் மீதும் பிள்ளைத் தமிழ் உண்டு; இதனை இயற்றினர் சீர்காழி அருணாசலக் கவிராயர். ஆசிரியரைப் பற்றிப்

பாடியது அம்பலவாண தேசிகர் பிள்ளைத்தமிழ் ஆகும். குலோத் துங்கன் பிள்ளைத் தமிழ், சிவந்தெழுந்த பல்லவராயன் பிள்ளைத் தமிழ் போன்றன வள்ளல்களைப் பற்றியன. இராஜாஜி பிள்ளைத் தமிழ், ம. பொ. சி. பிள்ளைத் தமிழ் போன்றன பெருமக்கள்மேல் பாடியனவாம்.

பிள்ளைத் தமிழ் - பொருள் :

மக்கள்மெய் தீண்டல் உடற்கின்பம், மற்றுஅவர்
சொற்கேட்டல் இன்பம் செவிக்கு.

என்றார் வள்ளுவனார். மெய் தீண்டுதல் உடலுக்கு இன்பமும், மழலைச் சொற்கேட்டல் செவிக்கு இன்பமும் பயப்பனவாம்; அதே போன்று குழந்தைகளின் விளையாட்டைக் காண்பதும் கண்ணுக்கு இன்பமாம். பெறலரும் பிள்ளையைப் பெற்ற தாய் தந்தையர் முதலியோர்,

குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கௌவியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்.

இன்பத்தால் அறிவை மயக்கிடும் - மயக்குறு மக்கள்தம் விளையாட்டு போன்றே செயல்களைக் கண்டு அனுபவிக்க, அவரிடைத் (அம்மழலைச் செல்வங்களிடைத்) தோன்றும் ஒருதலை இன்பமே பிள்ளைத் தமிழிடைப் பிறங்கும் பொருளாகும்.

பாடுதல் நுதலியது :

இச் சிற்றிலக்கியம் பற்றித் தொல்காப்பியம் - புறத்திணை பாடாண் திணையில், 'குழவி மருங்கினும் கிளவதாகும்' (சூ - 29) எனக்குறிக்கப் பெறுகிறது. இதற்கு உரை வகுத்த உச்சிமேல் புலவர்கொள் நச்சினார்க்கினியர், 'மருங்கினும் என்றதனான் மக்கட் குழவியாகிய ஒருமருங்கே கொள்க; தெய்வக் குழவி யின்மையின்...இதனை மேலவற்றோ டொன்றாது வேறுகூறினார்' தந்தையரிடத்தன்றி ஒரு திங்களிற் குழந்தையைப் பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலானும், பாராட்டுமிடத்துச் செங்கிரையுந், தாலுஞ், சப்பாணியும், முத்தமும், வரவுரைத்தலும், அம்புலியுஞ், சிற்றிலுஞ், சிறுதேருஞ், சிறு பறையுமெனப்

பெயரிட்டு வழங்குதலானும் என்பது' எனக் கூறுகிறார். காமப் பகுதியின்பாற்பட்டு மக்கட் குழவிக்கு உரித்தாக வழங்கப் படும்; ஆயினும் ஒரோ வழித் தெய்வத் தோற்றமாகிய மக்கட் குழவியின் பருவத்தை ஆரோபித்தலால் அக்குழவியோடு ஒற்றுமையுடைய தெய்வத்துக்கும் உரித்தாக இது வழங்கப் படும் என்பர்.

இனி, ஈண்டு பிள்ளைத் தமிழில், தமிழ் என்பது இயற்றமிழ், இசைத் தமிழ், நாடகத் தமிழ் என்னுமாப்போல, பிரபந்தம் என்னும் பொருள் பயக்கும். பிரபந்தம் = நூல்.

பிள்ளைத் தமிழ் – பிரிவு:

பிள்ளைத் தமிழ், ஆண்பாற் பிள்ளைத் தமிழ்; பெண்பாற் பிள்ளைத் தமிழ் என இரு பிரிவினுள் அடங்கும். ஒவ்வொன்றும் பத்துப் பத்து பருவங்களைக் கொண்டுளது. காப்பு முதல் ஏழு பருவங்கள் இவ்விரு பிள்ளைத் தமிழுக்கும் பொதுவாகும்; இறுதி மூன்று பருவங்கள் ஆண்பாற் பிள்ளைத் தமிழில் சிற்றில், சிறு பறை, சிறுதேர் எனவும், பெண்பாற் பிள்ளைத் தமிழில் அம்மானை, நீராடல், ஊசல் என வேறாகவும் அமையும்.

ஆண்பாற் பிள்ளைத் தமிழ் – அமைதி:

இதனுழை அமையும் பத்து நிலைகளையும் வச்சணந்திமாலை,

சாற்றரிய காப்புத்தால் செங்கீரை சப்பாணி
மாற்றரிய முத்தமே வாரானை – போற்றரிய
அம்புலியே யாய்ந்த சிறுபறையே சிற்றிலே
பம்புசிறு தேரோடும் பத்து. (செய்யுளியல்-8)

எனப் பகுக்கும். இதனையே பன்னிரு பாட்டியலார்,

காப்பொடு செங்கீரை தால்சப் பாணி
யாப்புறு முத்தம் வருகஎன் றல்முதல்
அம்புலி சிற்றில் சிறுபறை சிறுதேர்
நம்பிய மற்றவை சுற்றத் தளவென
விளம்பினர் தெய்வ நலம்பெறு புலவர். (இனவியல்-18)

எனவும், இலக்கண விளக்க முடையார்,

கடுங்கொலை நீக்கிக் கடவுட் காப்புச்
செங்கீரை தால்சப் பாணி முத்தம்
வாரானை முதல் வகுத்திடு மம்புலி
சிறுபறை சிற்றில் சிறுதேர் ரென்னப்
பெறுமுறை யாண்பாற் பிள்ளைப் பாட்டே. (46)

என்றும் விளம்புவர். இம்முறையினை யொட்டியே ஆண்பாற் பிள்ளைத் தமிழ் பாடப்பெறும். பெரும்பாலும் இவையே அமையும். சிற்சிலபோது அச்சோ வச்சோ எனல், புறம் புல்குவான் எனல், அப்பூச்சி காட்டுகின்ருள், முலையுணுய் எனல், நீராட வாராய் எனல், குழல்வாராய்க் காக்காய் எனல், ஒர் கோல் கொண்டு வா எனல், பூச்சூட்ட வாராய் எனல், சாப்பிட வாராய் எனல், இன்று முற்றும் என்ல் முதலியனவும் அமையும். இந்நிலையினைப் பெரியாழ்வார் திருமொழியிற் காணலாகும்.

## பெண்பாற் பிள்ளைத் தமிழ்-பெற்றி :

ஆண்பாற் பிள்ளைக் கவிக்குரிய பருவம் பத்தனுள் ஈற்றில் அமைந்த சிறுபறை முழக்கல் முதலிய மூன்றையும் நீக்கி, அவற்றிற்குப் பதிலாகக் கழங்கு, அம்மானை, ஊசல் என்ற மூன்றையும் கூட்டிப் பத்தாகப் பாடுதல் மரபு. இதனை,

.................... ........இறைவனையார்க்கு
அந்தஞ் சிறுபறையே யாதியா முன்ருெழித்துத்
தந்தநில மோரேமுஞ் சாற்று

எனவச்சணந்தி மாலையும்;

அவற்றுள் :

பின்னைய மூன்றும் பேதையர்க் காகா
ஆடுங் கழங்கம் மானை யூசல்
பாடுங் கவியாற் பகுத்து விருப்புடன்
அகவல் விருத்தத் தாற்சினை அளவாம் (சூ. - 47)

என இலக்கண விளக்கப் பாட்டியலும்;

திருந்திய பெண்மக வாயின் விரும்பிய
பின்னர் மூன்றும் மன்னுநீக் கென்றனர் (சூ. - 104)

எனப் பன்னிரு பாட்டியலும் பகரும். சிற்சிலபோது அம்மானையை நீக்கி நீராடலை அமைத்தலும் உண்டு. இவற்றோடு பெண்பாற் பிள்ளைத் தமிழில் விரும்பிப் பாடுதற்குரிய பகுதிகளாக சிற்றில் இழைத்தலும், சிறுசோறுக்கலும் (நிலாச் சோறுக்கல் போன்றது) அழகு பொருந்திய குழமகனும் (குழந்தை - பொம்மை விளையாட்டு), மணிகளாற் புனையப்பட்ட ஊசல் ஆடுதலும், பன்னிரண்டு ஆண்டில் நோன்பு நோற்றலும் அடங்கும். இதனைப் பாட்டியல்,

சிற்றில் இழைத்தல் சிறுசோ றுக்கல்
பொற்பமர் குழமகன் புனைமணி ஊசல்
ஆண்டீ ராறதில் எழிற்காமன் நோன்பொடு
வேண்டுதல் தானுள விளம்பினர் புலவர் (சூ. - 105)

எனக் கூறு நிற்கும்.

இவ்விரு பிள்ளைத் தமிழிலும் முன்னுற அமைத்தற்குரிய சுற்றத்தார் இன்னின்னர் என்பதை,

தந்தை தாயே பாட்டன் பாட்டி
முந்துற உரைத்தல் முறைமை என்ப

எனப் பன்னிரு பாட்டியல் (சூ103) பகரா நிற்கும்.

பருவநிலையும் பிள்ளைத்தமிழும் :

இனி பிள்ளைத் தமிழ் பாடுதற்குரிய காலமும், கேட்டற்குரிய காலமும் கூறுவாம். பிள்ளைப் பிரபந்தத்தைத் தெளிவுறப் பாடுமிடத்து, மூன்றும் மாதம்முதல் இருபத்தோராம் மாதம்வரையிலும் அமைந்த மாதங்களுள் சிறந்தனவாகிய ஒற்றித்த 10 மாதங்களிலும் கேட்பிக்கப்படும். ஒற்றித்த மாதங்களில் கேட்பித்தல் வேண்டுமாயினும், மூன்றும் ஆண்டிலும், ஐந்தாம் ஆண்டிலும், ஏழாம் ஆண்டிலும் கேட்பிக்கினும் இழுக்கன்று என்பர். இதனை,

முறைதருமுன் றுதிமு வேழிருந் திங்கள்
அறைகதிலம் பத்துமாண் டைந்தேழ். (வெண்பாப் பாட்டியல்)

பிள்ளைப் பாட்டே தெள்ளிதின் கிளப்பின்
மூன்று முதலா மூவேழ் அளவும்
ஆன்ற திங்களின் அறைகுவர் நிலையே.
(பன்னிரு பாட்டியல்)

மூன்று முதல்மு வேழு திங்களின்
ஒற்றை பெற்ற முற்றுறு மதியின்
கொள்ளுக பிள்ளைக் கவியைக் கூர்ந்தே
மூன்றைந் தேழா மாண்டினு மாகும். (இலக்., விள., பாட்டியல்)

என்ற சூத்திரங்களால் தெளியலாம். ஒரு சாரார் ஆண்பாற் காயின் பதினாறு ஆண்டெனவும், பெண்பாற் காயின் பூப்பு நிகழும் வரையிலும் கேட்பிக்கலாம் என்பர். இதோ மேற்கோள்:

தோற்ற முதல்யாண் டீரெட் டளவும்
ஆற்றல் சான்ற ஆண்பாற் குரிய
காப்புமுத லாகிய யாப்புவகை யெல்லாம்
பூப்பு நிகழ் வளவும் பெண்பாற்குரிய. (இந்திர காளியார்)

பருவநிலை பகர்ந்தோம்; பருவநிறை பகர்வாம்:

I. காப்புப் பருவம் :

பாட்டுடைத் தலைவராகிய குழந்தையைப் பாதுகாக்க எனத் தெய்வங்களை வேண்டுவது காப்புப் பருவம்.

கண்டுரைக்கிற் பிள்ளைக் கவிதெய்வங் காக்கவெனக்
கொண்டுரைக்குந் தேவர் கொலையகற்றி—ஒண்டொடியாய்
சுற்றத் தளவா வகுப்பொடு தொல்விருத்தம்
முற்றுவித்தல் நூலின் முறை.

என வெண்பாப் பாட்டியல் வரையறுத்து நிற்கும். காப்புச் செய்யுள் ஒன்பதாகவேனும் பதினொன்றாகவேனும் பாடுதல் வேண்டும். 'ஒன்பது பதினொன்றென்பது காப்பே' என்பது விதி. நிலைகள் பத்தையும் தம்மில் ஒப்பக்கொண்டு பாடுமிடத்து ஒற்றைப்படப் பாடுதல் சிறப்புடைத்து; இரட்டிக்கப் பாடின் ஓசை பெயர்த்துப் பாடுதல் நன்றென்பர் நல்லறிஞர். குழந்தை பிறந்த ஏழாம் நாள் காப்பிடுதல் என்ற வழக்கினை யொட்டித் தான், இலக்கிய வழக்கிலும் காப்புப் பருவம் இடம்பெற்றது போலும்.

இனி இக் காப்புச் செய்யுளில் வருதற்குரிய கடவுளர் இன்னின்னுர் என்பதைப் பன்னிரு பாட்டியலார்,

திருமால், அரனே, திசைமுகன், கரிமுகன்,
பொருவேல் முருகன், பரிதி, வடுகன்,
எழுவகை மங்கையர், இந்திரர், சாத்தன்,
நிதியவன், நீலி, பதினெரு மூவர்,
திருமகள், நாமகள், திகழ்மதி, என்ப
மருவிய காப்பினுள் வருங்கட வுளரே

எனக்கூறுவது கொண்டுணரலாம். இம்முறையை மாற்றிப் பிறவாறு அமைக்கும் பெரியோரும் உளர். இப்பருவத்தின் முதற் செய்யுள் பெரும்பாலும் திருமால் காப்பாகவே அமைதல் பண்டு தொட்டு வரும் மரபாகும்.

காப்பின்முதல் எடுக்கும் கடவுள் தானே
பூக்கமழ் துழாய்முடி புனைந்தோன் ஆகும்

என்பது பன்னிரு பாட்டியல். திருமால் காத்தற் கடவுளாதலானும், திருமகட்குரியனுதலாலும், முடியும் கடகமும் மொய் பூந்தாரும் குழையும் நூலும் குருமணிப்பூணும் அணியும் செம்மல் ஆகலானும் முன்றுற மொழிதற் குரியனுகின்றுன் மால். இக் கடவுளரில் சில பாட்டுடைத் தலைவராக அமைந்திடின், அவர்களை விடுத்துப் பாடுதலும் உண்டு; அன்றி அவர்கட்குரிய விடத்தில் பிறரைக் கூறுதலும் உண்டு. காட்டாக; சேயூர் முருகன் பிள்ளைத் தமிழின் பாட்டுடைத் தலைவர் முருகக் கடவுளாகலான் அப்பெருமானைக் காப்பில் அமைத்திலர். மங்களாம்பிகை பிள்ளைத் தமிழில் பாட்டுடைத் தலைவி அம்மையார் ஆகலின் அவ்வம்மையாரைக் கூருது துர்க்கையைக் காப்பாகக் கழறப் பட்டுள்ளது. இக்காப்புப் பருவம் மூன்றுந் திங்களிற் கூறப்படும்; இரண்டாம் திங்கள் என்பாரும் உளர்.

## 2. செங்கீரைப் பருவம்:

இது பொருள் தெரியாத ஒலியை எழுப்பும் பருவத்தைக் குறிப்பது என்பர். சிர் = சொல், பெரியவாச்சான் பிள்ளை இதனை ,நிருத்த விசேடம்' என்பர். ஒரு காலை முடக்கி, ஒரு காலை

நீட்டி, இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலை நிமிர்த்தி, முகம் அசைத்து ஆடும் பருவமே இது. 'செங்கீரை யாடியருளே! செங்கீரை யாடியருளே!!' என இப்பருவப் பாடல்கள் முடியும். இது ஐந்தாம் மாதத்திலே பாடப்பெறும்.

3. தாலப் பருவம் :

குழந்தைகளைத் துயில்கொள்ளுமாறு செய்வோர் தம் நாவை அசைத்துப் பாட்டுப் பாடுதலைக் குறிப்பது இப் பருவம். தாலாட்டு என்பது மருவி 'தால்' என நின்றதெனலாம். இப் பருவப் பாடல்கள் அனைத்தும் 'தாலோ தாலேலோ' என முடியும். இஃது எட்டாம் மாதத்தில் எடுத்தோதப் படுவது.

4. சப்பாணிப் பருவம் :

கையொடு கை சேர்த்துக் கொட்டலைக் குறிக்கும். சப் பாணி கொட்டும்படி குழந்தைகளிடம் கூறுவதாக அமைக்கப் படும் ஸ+பாணி என்பதுதான் சப்பாணி என்றாயிற்றென்பர். இதன் கண் இடம் பெறும் பாடல்கள் எல்லாம் 'சப்பாணிகொட்டி யருளே' எனமுடியும் இயல்பினவாம். ஒன்பதாம் மாதத்தில் உரைக் கப்படுவதாகும்.

5. முத்தப் பருவம் :

தாயரும் பிறரும் 'முத்தந் தா' எனக் குழந்தையை வேண்டு வதாக அமைவது இப்பகுதி. முத்தம் என்பது முத்தையும் குறிக்குமன்றோ! அம்முறை பற்றிப் பல்வகை முத்தங்களினும் சாலச் சிறந்த பவள வாய் முத்தமே சிறந்ததெனச் சாற்றப் பெறும். பெரும்பாலும் 'முத்தந் தருகவே' என இப்பருவப் பாடல்கள் அமையுமாறு அறிக. இது பதினோராம் மாதத்தில் பகரப்படுவது.

6. வருகைப் பருவம் :

இதனை 'வாரானைப் பருவம்' எனவும் வழங்குவர். தத்தித் தத்தித் தளர்நடையிட்டு வரும் குழந்தையை 'வா வா' வென அழைப்பதாகப் பாடுவது இதன் கண் அமையும். பாடல்களும் 'வருக, வருகவே' என முடியும். இது பன்னிரண்டாம் மாதத்தில் கூறப்பெறுவது.

7. அம்புலிப் பருவம்.

அம்புலியை (நிலாவை) நோக்கிக் குழந்தையுடன் விளையாட வாவென அழைப்பதாக அமைவது இப்பருவச் செய்தி. சாம, பேத, தான, தண்ட மாகிய நால்வகை உபாயங்களானும் சந்திரனை அழைப்பர். ஒப்பு, வேற்றுமை, நலம், தீமை என்பனவே அவ்வுபாயங்கள்; அம்புலியைக் குழந்தையோடு சமப்படுத்தியும், பேதப்படுத்தியும், வண்மை நிலையினை விளம்பியும், நிலவினை அழைப்பதோடு அமையாது, வாராவிடில் இன்னது செய்வன் எனத் தண்ட நிலை சுட்டி அச்சுறுத்தியும் அமைவன இப்பருவப் பாடல்கள். பாடல்களும் 'அம்புலீ ஆடவாவே' என்னும் முடிபின. இது பதினெட்டாம் மாதத்தில் பாடப்பெறுவது.

சிற்சில நூல்களில் சில குறிப்பிட்ட பகுதிகள் பாடுவது கடினம். அம்முறையில் இவ்விலக்கிய வகையில் சாம, பேத, தான, தண்ட வகையினை வைத்துப் பாடுதல் இன்னலுடைத்து. அம்புலிப் பருவம் பாடுதல் கடினம் என்பது எண்ணித்தானோ என்னவோ 'அம்புலி புலி' எனவும்; புலமையின் வளமையை-எல்லையை அளத்தற்குரிய கருவியாக இவ் அம்புலிப் பருவம் கருதப்படும் என்றும் ஆன்றோர் கூறுவர். (உலா வெனும் சிற்றிலக்கியத்தில் 'பெதும்பைப் பருவம்' பாடுதல் 'புலி' எனக் கூறப்படும்).

இந்த ஏழு பருவங்களும் இருவகைப் பிள்ளைத் தமிழுக்கும் பொது. ஏனை மூன்றும் வேறுபடுவன. எனவே ஆண்பாற்-பெண்பாற் பிள்ளைத் தமிழுக்குரிய பின் மூன்று பருங்களையும் தனித்தனியே தருதும்.

8. A. சிற்றிற் பருவம்:

சின்னச் சின்ன விடுகட்டி விளையாடும் சிறுமியர் இழைத்த சிற்றிலைப்பாட்டுடைத் தலைவர் காலால் அழித்துச் சிதைக்கத் தொடங்குவதைச் சுட்டி, எங்கள் சிற்றிலைச் சிதையாதொழிக என்று வேண்டி நிற்பதாக அமைவது இப்பருவம். இதன்கண் அமையும் பாடல்கள் முடிபு 'சிறியேஞ் சிற்றில் சிதையேலே' என்னும் போக்கின. இஃது இரண்டாம் யாண்டிலே இயம்பப்படுவது.

**9. A. சிறுபறைப் பருவம் :**

பாட்டுடைத் தலைவராம் குழந்தையைச் சிறுபறை கொட்டியருளுமாறு செவிலியர் வேண்டுவதாக அமைவது இஃது. 'கொட்டுக சிறுபறையே', 'சிறுபறை முழக்கியருளே' எனும் முடிபின இப்பாடல்கள். மூன்றும் யாண்டிலே மொழியப் பெறுவது இப்பருவம்

**10. A. சிறு தேர்ப் பருவம் :**

சிறு தேர் உருட்டி உருட்டி விளையாடுமாறு பாட்டுடைத் தலைவனுய குழந்தையைத் தாய் வேண்டுவது இப்பருவ உட்பொருள். 'உருட்டுக சிறுதேரே', 'சிறுதேர் உருட்டியருளே' எனும் சொற்களோடு பாடல்கள் முடியும். நான்காம் ஆண்டில் நிகழ்வது இது.

(வளரும்)

---

## வடிவேலவா முருகா



இராகம் : மோகனம் தாளம் : ஆதி

பல்லவி

வடிவேலவா முருகா ஷண்முகா குஹா
வள்ளி மணுளா தயாளா செந்தூரா (வடி)

அனுபல்லவி

அடிபணிந் துனைப்போற்றி சுகமாயிருக்க உந்தன்
சன்னிதியிலே நின்று பாடிக்களிக்க வேண்டும் (வடி)

சரணங்கள்

1. இல்லையோ தயவுஇன்னும் இடையூறும் வராமல்
இன்னல் எதுவுமின்றி இன்பமதாகச் செய்து
நல்ல வழிவைக்க வேண்டும் நன்மைதரவும் வேண்டும்
நாயகா நீயன்றியல்லால் நாடுவதும் யாரிடமோ (வடி)

2. அல்லும்பகலும் உன்னைச் சொல்லித்தினம்துதிக்க
ஆதிபரம் பொருளே ஆதரித் தருள்வாயே
அகண்ட பரிபூரண ஆனந்த மயமாகி
அங்கிங் குமாகவே எங்கு மிருப்பவனே. (வடி)

வி. கே. முத்தையா பிள்ளை, பி. ஏ., பி. எல்.,
வண்ணூர்பேட்டை, திருநெல்வேலி-3.

# காக்கையின் அருங்குணங்கள்

வித்துவான். திரு. பொன். முருகையன் அவர்கள்,
தமிழாசிரியர்,
ஸ்ரீ கயிலை சுப்பிரமணிய தேசிகசுவாமிகள் உயர்நிலைப்பள்ளி,
திருப்பனந்தாள்.

"காக்கா பிடித்தல்" என்று நாம் அடிக்கடி சொல்லி வருகிறோம். காரணம்? காக்கையைப் பிடிப்பதற்குப் பொறி, கடலை முதலியவற்றை வைத்தால், அவைகள் கூட்டம் கூட்டமாக வந்து சேரும். உடனே பிடித்து விடலாம். அது போல ஒருவரிடத்து ஒரு காரியம் நடைபெற வேண்டியிருந்தால், அவரிடம் சொல்லாலோ பொருளாலோ உயர்த்தி, தான் கருதிய செயலை முடித்தல் காக்கா பிடித்தல் என்று இக்காலத்தில் சொல்லப்படுகிறது.

கி. பி. 17-ம் நூற்றுண்டில் தோன்றி, காசி முதல் குமரி வரை தலயாத்திரை முடித்து, தருமை யாதீனக் குருமணி ஸ்ரீலஸ்ரீ மாசிலாமணிதேசிக சுவாமிகளைக் குருவாகப் பெற்று, காசியில் நவாபிடம் இந்துஸ்தானி மொழியில் பேசி, அவரிடம் இடம் பெற்று, குமாரசாமி மடம் நிறுவி, சகலகலாவல்லி மாலை, நீதி நெறி விளக்கம், சிதம்பரச் செய்யுட் கோவை முதலிய நூல்களைத் தமிழுலகிற்கு அளித்து முத்தி பெற்ற ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெருமை இவ்வுலகம் அறிந்ததே.

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தாம் இயற்றிய நீதிநெறி விளக்கம் நூற்றொரு பாடல்களைக் கொண்டது. எளிய இனிய நடையில் வெண்பா யாப்பில் அமைந்து, கேட்போர்க்கும் படிப்போர்க்கும் சுவைதருவது. அப்பாடல்களுள் ஒன்றனுள், ஒரு சிறந்த கருத்துப்பொதிந்து கிடப்பதைக் காண்போம். அப்பாடல் வருமாறு:

"பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாதே நோற்ப தொன்றுண்டு—பிறர்பிறர்
சீரெலாம் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்கும் தாழ்ச்சி சொலல்." (நீதிநெறி விளக்கம்)

அப்பாடலின் உட்பொருள் "ஒருவன் பிறனொருவனிடத்து ஒரு உதவியை எதிர்பார்த்தால், அவன் எக்காலத்தும் மறவாமல் கடைப்பிடிக்க வேண்டியது ஒன்று உண்டு. அது யாதெனின் மற்றவர்களுடைய பெருமைகளை யெல்லாம் எடுத்துக்கூறி, அவர்களுடைய தாழ்ந்த செயல்களை வெளிப்படாமல் மறைத்து, யாரிடத்தும் தாழ்மையுடையனாக இருத்தலே யாம்.

இப்பாடலின் கருத்து:– பிறருடைய உதவியை என்றும் நாடுபவன் எக்காலத்தும் செய்ய வேண்டிய செயல்கள் யாவை என்பன.

(1) பிறருடைய புகழை உயர்த்திக் கூறல்.
(2) பிறருடைய சிறுமையை மறைத்தல்.
(8) யாரிடத்தும் பணிவுடைமை.

ஆசிரியர் சிறப்பித்துக் கூறிய மேற்கண்ட புகழ் கூறுதல், சிறுமை மறைத்தல், பணிவுடைமை ஆகிய மூன்றும் அக் காலத்துச் சிலரிடம் வேரூன்றிய பண்புகளே. அதையே ஆசிரியர் சிறப்பித்துக் கூறியிருக்கிறார். நாகரீக முறையில் நன்கு விளங்க, சுருங்கிய முறையில் கூறியிருக்கிறார். ஆனால் அதே மூன்று பண்புகள் இக்காலத்தில் இக்கட்டுரையில் முகப்பில் கூறிய செயலாக மக்களால் கருதப்படுகிறது. காரணம், காலப்போக்கும் மக்கள் மனமாறுபாடுமே யாகும்.

இனி, காக்கையினைப் பற்றித் தமிழ் இலக்கியங்களிலும் புராணங்களிலும் வந்த இடங்களைப் பார்ப்போம். ஐங்குறு நூறு, பாரதி பாடல், திருக்குறள், யாப்பருங் கலக்காரிகை, பழமொழி நானூறு முதலிய நூல்களில் காக்கையின் சிறப்பு பேசப் படுகின்றது.

"பனிமாலிமயப் பொருப்பகம் சேர்ந்த பொல்லாக் கருங்காக்கையும்"

என்று யாப்பருங் கலக்காரிகை கூறுகிறது.

"கள்ளி யகிலும் கருங்காக்கைச் சொல்லும்போல்
எள்ளற்க யார் வாயின் நல்லுரையை"

என்ற பழமொழிப் பாடலிலிருந்து, காக்கைச் சொல்லை இகழாதே-காக்கை கரைதல் ஒரு பயனைத்தரும் என்ற கருத்துக்கள் தெளிவாகின்றன.

காக்கையின் நிறம் திருமாலின் நிறம் என்பதை ஒரு திருமாலடியார் புகழ்ந்து பாடியுள்ளார்.

"கரையாய் காக்கைப் பிள்ளாய்
கருமாமுகில் போல் நிறத்தன்
உரையார் தொல்புகழ் உத்தமனை வரக்
கரையாய் காக்கைப் பிள்ளாய்"

என்பது அப்பாடல்.

"காக்கை கரவா கரைந்துஉண்ணும்; ஆக்கமும்
அன்னநீ ரார்க்கே உள.

என்ற குறட் பாவிலிருந்து, காக்கை தன் சுற்றத்தோடு இரையுண்ணுதல் போலச், செல்வர்களும் சுற்றத்தாரை விருந்தோம்ப வேண்டும் என்ற கருத்துப் புலனுகின்றது.

இந்தப் பாடலுக்கு உரைஎழுதிய பரிமேலழகர் "காக்கைகள் இரையாயின கண்ட வழி மறையாது தம் இனத்தையும் கூட்டா நிற்கும். செல்வத்தான் எய்தும் பயனும் அன்ன நீரார்க்கே" எனக் குறிப்பிடுகிருர்.

எனவே, காக்கைகள் அருங் குணங்களை யுடையன. மாலை நேரத்தில் அவைகள் குளித்த பிறகே இரையுண்ணும் இடத்தைச் சுத்தம் செய்யும் பண்பை உடையன. கூட்டம் கூட்டமாக உணவு உண்ணுவன. அவைகள் கரைந்தால், உறவினர் வருவர் என்னும் நம்பிக்கை நம் நாட்டில் உண்டு. எனவே, நாம் காக்காய் பிடிக்காது, அதனைப் போல் நடக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

சிவ சிவ சிவ சிவ சிவ சிவ சிவ

உ

சிவமயம்

பாலறாவாயர் துணை

# அருணந்தி முனிவர் அருஞ்செயல் மாலை

(மூன்றாம் பகுதி)

தேவகோட்டை "செட்டிநாடு" இதழாசிரியர்
"தருமபுர ஆதீன வித்துவான், திருவண்ணாமலை ஆதீன விரிவுரையரசு,
மதுரை ஆதீனச் சித்தாந்த சைவ வித்தகர்
சித்தாந்தப் புலவர் மாமணி, பாலகவி"
வயிநாகரம். திரு. வே. இராமநாதன் செட்டியார் அவர்கள்
இயற்றியது.

---

[மலர் 13. இதழ் 3-ன் தொடர்ச்சி]

ஐயா யிரமாங் கண்ணப்ப ரன்பு செய்த காளத்தி யருமைப் பெருமைத் திருத்தலத்தி லான திருத்தே வாரநிதி, ஐயா றாயி ரம்மாதி யண்ணல் குமர குருபரனார் அரிய நினைவில் மகப் பேற்றுக் கமையு மருத்து வம்புரிய, எய்யா நிதிமுந் நூறாகி யிலங்கு மாயி ரம்மவர்பேர் ஏற்ற கல்வி நிலையங்கட் கினிதே வழங்கு முதவிநிதி, பொய்யா விருநூ றாயிரநம் புனிதன் செந்தி லாண்டவன்சீர் போற்றுங் கந்தபுராணத்தைப் புகலும் படன நிதியெனவே 20

பதினை யாயி ரம்மருணைப் பதியி னெய்யாற் றிருவிளக்குப் பண்பா யிடுதற் களித்தநிதி பகரு மேழைந் தாநூறு, நதியாங் கங்கைத் திருத்தாய்வாழ் நல்ல வார ணாசியினில் நயமார் கார் வேட் நகரரசர் நாடு நினைவிற் சோறளிக்க, விதியார் நிதியோர் பத்தோடு மேவு மூன்றா யிரமாகும் மேலாங் குடந்தைப் பெரும் பதியில் விளங்கு மாசி மகநாளில், புதிய சோற்றை யூட்டுதற்குப் புந்தி மகிழ்ந்து தந்தநிதி பொற்பார் நாலா யிரத்துடனே போந்த வைந்நூ றாமன்றே 21

இலங்கை மன்ன னிடமிருந்த வேந்தல் பூசை யேற்றுமகிழ் இராமநாத ரினிதுறையு மின்பத் தலத்தில் மாசிமகம், துலங்கு நாளி லுயிரான சோறு வழங்க வாருருச் சொல்லு மாயிரம் நெல்லைத் தூய தலத்தும் சிவன்மகிழ்ந்தே, இலங்கி யருளு மாலவன இன்பத் தலத்துங் குமரகுரு ஏற்ற நினைவு நாளிலன்னம் இடுதற் காக வியைந்தநிதி, வலங்கொள் பதினு யிரமெங்கள் வாழ்வாய் வந்த குமரகுரு மகிழ்ந்தே தோன்றத் தவம்புரிந்த வைகுண் டப்பேர்ப் பெரும்பதியில் 22

ஆடு துறையி லவர் திருப்பே ரமையுங் கலைக்கல் லூரிகளுக் ககமு முகமு மலர்ந்தன்போ டளித்த நிதியா றிலக்கமாம், பீடு விளங்கும் ராமேசப் பெரிய பதியின் மேடமதி பிறங்கு மிடப மிதுனத்திற் பெட்பார் கார்வேட் நகர்மன்னர், ஈடி னினைவிற் சோறளிக்க வீந்த நிதியா ருயிரமாம் எங்கள் பனசைத் திருத் தலத்தி லெல்லா வுயிருந் தொழத்தருமை, நாடி யமர்ந்து கயிலை வரை நணுகித் தொழுது மீண்டெமக்கு நல்ல கதியைத் தந்துத வும் ஞான குருவாய் வீற்றிருப்போன் 23

கயிலைக் குருசுப் பிரமணியக் காத லாசான் றிருப்பெயரால் காணும் பள்ளி நிதியிலக்கங் கண்ணுர் நெற்றிக் கடவுண்மகிழ், பயிலு மாக்கூர்த் திருத்தலத்திற் பண்பார் குமர குருபரனுர் பரவு நினைவு நாளன்னம் பாலிப் பையா யிரமாகும், மயிலார் சோலைப் புகார்ப்பதியின் மன்னுங் குமர குருபரனுர் வாய்ந்த நினைவு நாளன்னம் வழங்குநிதியை யாயிரமாம், எயிலார் திரு வாப் பாடியினி லிறைவர் புதல்வர் சண்டேசர் இனிய நினைவி லானிரைகட் கேற்ற சம்வர்த் தனநிதியே 24

ஏழா யிரமாங் குடந்தையினி லினிமைத் திருத்தே வாரநிதி யிலங்கு முப்ப தாயிரமா மிறைவன் பூம்பு கார்ப்பதியிற், சூழுந் தண்ணீர்ப் பந்தர்நிதி துலங்கு மேழைந் தா நூறு தூய வேத வனப்பதியிற் றுகடீர் குமர குருபரனுர், வாழு நினைவு நாள ன்னம் வழங்க வையா யிரந்தில்லை வளமார் தலத்திற் கடகமதி மன்னுஞ் சோதி நன்னுளில், ஏழின் னிசைத்தே வார நிதி யிருபத் தையா யிரமிவற்ருே டின்னும் அறங்கள் பலபுரிய வெங்கள் தலைவர் வாழியரோ. 25

முற்றும்

# நூல்

# சமய ஆசார விளக்க வினுவிடை

திரு. T. சாமிநாத சிவாச்சாரியர் அவர்கள்.

[மலர் 13. இதழ் 3-ன் தொடர்ச்சி]

12. வினு: இடக்கையோ வலக்கையோ துடைப்பது முந்த ஏன்?

(இ-ள்.) காதைப் பரிசித்தபின் இடக்கரத்தையா? வலக் கரத்தையா? முதலாவது துடைப்பது? ஏன்?

விடை: வலக்கரத்திலே சகல தேவதைகளும் அதிட்டிக்கப் பட்டு இருத்தலான் அந்தக் கரத்தைக் கொண்டு அசுசியாகிய இடக்கரத்தை அத்திர மந்திரத்தால் உள்ளும் புறம்பும் இவ் விரண்டு தரம் துடைத்துச் சுத்தியாக்கிப் பின்பு இடக்கரத்தைக் கொண்டு வலக்கரத்தை அவ்வாறு சுத்தி செய்க.

13. வினு: கர நியாசத்தால் வரு பயன் ஏது?

(இ-ள்.) கரங்களைத் துடைத்தபின் அவற்றை நியாசம் பண்ணுவதால் வரும் பயன் யாது? (நியாசம் - தொட்டுச் செய் யும் கிரியை.)

விடை: கரங்களின் சாகைகள் ஆகிய விரல்கள் சுத்தி யாவது.

பிரம்மசரியம் முதலிய நான்கு ஆச்சிரமத்தாரும், சிருட்டி, திதி, சங்காரம் ஆகிய மூவித நியாசங்களை அவரவர்க்குக் கூறிய வழி அறிந்து செய்யில் அந்தந்தப் பதத்தை உடைய வர்கள் ஆவர்

நியாசம் மூன்றில் சிருட்டி நியாசம் கிருகஸ்தனும், திதி நியாசம் பிரமசாரியும், சங்கார நியாசம் வானப் பிரஸ்தனும், சந்நியாசியும் கொள்க.

14. வினு: உறுப்பில் ஒன்றல்லவோ சிறப்பென் கரம் தான்?

(இ-ள்) அவயவங்களுக்குள் ஒன்றல்லவா கைகள். அவை களுக்கு மட்டும் விசேடம் வைத்தது யாது?

விடை: சக்தி சிவமான இருகையும் ஒன்று கூட்டி, அங்குட்டமாகிய பெருவிரல் இரண்டையும் நடுப்பெறக் கர்ணி கைபோல மடக்கி. மற்றை எட்டு விரல்களையும் எட்டு இதழ் களாகப் பாவித்துத் தாமரை மலர் ஆக்குவதே.

15. வினு: அத்தத்தின் மந்திரம் மெத்த வைப்பானேன்?

(இ-ள்.) அந்தக் கைகளிலே, மந்திரங்களை மிகவும் வைத் துக் கிரியை செய்தற்கு என்ன காரணம்?

விடை: தாமரை மலர் போன்ற அந்தக் கைகளின் சாகை களாகிய விரல்களிலே சிவபிரானைப் பூசித்தற் பொருட்டு, பூசித் தல், ஆசனம்,. மூர்த்தி முதலிய மந்திரங்களால் என்பது உபதேச முறையால் உணர்க.

16. வினு: தங்கும் பயன் ஏது அங்க நியாசத்தால்?

(இ-ள்.) அவயவ நியாசத்தால் உண்டாகும் பயன் யாது?

விடை: சிவத்துவம் இல்லாதவன் சிவனை அருச்சித்தற்கு அருகன் அல்ல. ஆதலின் அவயவங்களிலே ஆசனம், மூர்த்தி முதலிய மந்திரங்களினுலே பரிசித்துக் கிரியை செய்து அருச் சித்து அருகனுதற் பொருட்டு.

17. வினு: அப்பினை அள்ளித்து அற்பித்து என் பயன்?

(இ-ள்.) தண்ணிரை அள்ளி விட்டதினுலே பயன் யாது?

விடை: சங்கிதா மந்திரங்கள், தேவர்கள், இருடிகள்; பூதம், பிதிரர்கள் முதலாயினேர்க்கு விருப்பம் ஆவது.

18. வினு: நியதி முடித்து நியாசம் பண்ணின் நிறை பயன் ஏது உப தேசிகனே?

(இ-ள்.) ஞானசாரியரே! நீர் கூறியபடியே நியதி செய்து இரண்டாவது நியாசம் செய்தால் வரும் பயன் யாது?

விடை: முதலிலே கரசுத்தி செய்து இரண்டாவது கர நியாசம் பண்ணினுல் கரம் மிகச் சுத்தியாவது. கர சாகைகளை ஒருதரம் சுத்தி செய்தால் போதாதோ என்றுல் குண்டத்திலே இருக்கும் அக்கினியைப் பிரகாசப் படுத்தி ஓமம் பண்ணுவது போலக் கர சாகைகள் மந்திரங்களால் சுத்தியாய் இருக்கவும்,

திரும்பத் திரும்ப சுத்தி விருத்தியாதற் பொருட்டு மறுதரமும் நியாசிக்க வேண்டும்.

19. விஞ: தொண்டர் நாளும் தெண்டம் பண்ணில் விண்ட வினை எது தண்டா அருளாய்?

(இ-ள்.) நீங்காத கருணையுடைய ஆசாரியரே! பக்தர்கள் தினந்தோறும் சூரிய நமஸ்காரம் பண்ணினுற் போன கன்மம் யாது?

விடை: அந்த நமஸ்காரத்தினுலே இம்மையிலே மகத்தாகிய குட்டம் முதலிய வியாதிகள் எல்லாம் தீர்ந்து மறுமையிலே மோக்ஷத்தை அடையலாம்.

20. விஞ: தருக்கென நாளும் திருக்கோ யிலிலே எண்ணிய நியமம் பண்ணிய பயன்என்?

(இ-ள்.) பக்தி இன்றிச் செருக்குதலுடனே யாயினும் சிவாலயத்திலே சென்று சிவலிங்க தரிசனம் செய்தால் பயன் யாது?

விடை: சிவலிங்கப் பெருமானைக் காலையில் தரிசித்தால் சகல பாவங்களும் போகும். நண்பகலில் தரிசித்தால் ஒரு பிறவியில் செய்த பாவங்கள் எல்லாம் போகும். மாலையில் தரிசித்தால் ஏழு பிறவியில் இயற்றிய பாவங்கள் எல்லாம் நீங்கும்.

21. விஞ: ஓம் என்று எழுகால் சாமானிய அர்க்கியம் பத்திரம் தன்னை மெத்த நறுக்கித் தாபித்து என் பயன் ஆபத் திரனே?

(இ-ள்.) அடியார்கள் விபத்தை நீக்கும் ஞானுசாரியரே! பிரணவத்தை உச்சரித்து ஏழுதரம் பத்திரத்தைக் கிள்ளிச் சாமானிய அர்க்கியம் கூட்டுவதில் பயன் யாது?

விடை: துவார பாலகர்கள், ஆவரண தேவதைகள், சண்டேஸ்வரன் இவர்களுக்கு அவ் அருக்கியத்தைக் கொடுத்து இவர்கள் அருள் பெறுவது.

22. விஞ: நிச்சயமாக பச்சிமந் தன்னில் ஆசில் துவாரம் பூசித்து என்பயன்?

(இ-ள்.) துவாரம் நான்கு திக்கிலும் உண்டாயிருக்கவும் மேற்குத் துவாரத்தில் மாத்திரம் பூசித்ததனுல் பயன் யாது?

விடை: வடக்குத் திக்கு சக்தி இருக்கும் தலம் ஆதலால் துவார பூசை ஆகா தென்று சித்தி ஆகமம் கூறுதலானும், பூருவத் திக்கிலே துவார பூசை செய்யின் போகத்தைக் கொடுக்கும் என்றும், தக்ஷிண திக்கிலே கோமுகியை வடக்கில் வைத்துத் துவார பூசை செய்தல் குற்றம் என்றும் மகுடாகமம் கூறுதலானும் இம்முன்றையும் ஒழித்து மேற்குத் துவாரத்திலே பூசை செய்வதே போக மோக்ஷங்களைக் கொடுக்கும் என்று கூறப்பட்டது. இது சிவாகம நூல் துணிபு.

## II சிவ பூசை

23. வி௵: அழுந்தச் சிவனை யெழுந் தருளப் பண்ணிப் பஞ்ச சுத்தியை விஞ்சவே நாளும் திண்ணமாகப் பண்ணும் படிஎன்?

(இ-ள்.) பெட்டகக் கோயிலுள் இருக்கும் சிவலிங்கப் பெருமானை இறுகப் பிடித்து எழுந்தருளச் செய்து ஆன்மசுத்தி, தானசுத்தி, திரவிய சுத்தி, மந்திரசுத்தி, இலிங்கசுத்தி ஆகிய ஐந்து சுத்தியினையும் உறுதியாகச் செய்யும் தன்மையால் பயன் யாது?

விடை: ஆன் மாக்களுக்குப் போக மோக்ஷம் அருளுதற் பொருட்டேயாம். தீக்ஷை பண்ணும்போது ஆன்ம சோதனை பண்ணியிருக்கவும், மீண்டும் நாடோறும் பூதசுத்திகூறியது அந்தப் பூதம் வாயிக பூதம் என்றும், அப்பியந்தர பூதம் என்றும் இருவகைப் பட்டிருக்கும்.

ஆறத்துவாவை அடைந்திருக்கும் பூதமும், சரீர கெதமாய் இருக்கிற தூலபூதமும், தீக்ஷயினலே சோதிக்கப்பட்டுச் சுத்தமாய் இருந்தாலும் ஆன்மா சஞ்சித கன்ம வாதனை சரீர கெதமாய் இருந்து புசிக்கையினுல் அதுசுத்தி ஆயிற்றோ இல்லையோ என்று சந்தேகம் நிகழ்தலாலே யோக தாரணையினுலே நாடோறும் பூத சோதனையைப் பண்ணி மந்திர மயமாக்கிச் சுத்தனுய்ச் சிவலிங்கப் பெருமானை அருச்சிக்க வேண்டும். (பூதம்-ஆன்மா)

தான சுத்தியாவது பூமி, அந்தரிக்ஷம், ஆகாயம் என்னும் மூவகை விக்னங்களையும் அத்திர மந்திரத்தால் போக்குவது. அவற்றைப் போக்காத விடத்துப் பயன் இல்லை. திரவிய சுத்தியாவது திரவியங்கள் எல்லாம் மாயையினிடத் தினின்றும் உண்டாவனவாதலால் சுத்தனுய் இருக்கிற சிவபிரானுக்கு மாயேயமாகிய திரவியங்கள் அங்கீகாரமாக மாட்டா. அது வன்றிப் பலத்தையும் கொடா. ஆதலால் சிவ சக்தியை நிரீக் கணுதி மந்திரங்களால் அவற்றில் அதிட்டிப்பது. அங்ஙனம் செய்யில் சுத்தியாகிச் சித்தாகிய சிவனுக்கு ஏற்கும். அஃது எங்ஙனம் என்னில் விறகானது அக்னியைச் சேர்ந்த போதே தற் சொரூபம் கெட்டு அக்னி சொரூபம் ஆனுல் போல என்க:

மந்திரங்கள் எல்லாம் எந்நாளும் சுத்தியாய் இருக்கவும் அவற்றைச் சுத்தி செய்வானேன் என்னில், மந்திரங்கள் அதிகார பலத்தினுடன் கூடி திரோதான சத்தியால் மறைப் புண்டிருக்கையில் பஞ்சகலை முதலிய பிராசாத மந்திரத்தைச் சமயி முதலிய நால்வரும் அவரவருக்கேற்ற பிரா்சாத கலைகளை அறிந்து அந்தப்படி உச்சரிக்கில் அம்மந்திரங்கள் பராசத்தி யுடனே லயித்து அக்குற்றம் நீங்குதற் பொருட்டு என்க.

இலிங்க சுத்தியாவது சிவபிரானை ஸ்நான வேதிகையில் எழுந்தருளப் பண்ணி பரிபூசை செய்து அபிஷேகம் பண்ணுவது. அந்தச் சுத்தி செய்யாவிடில் முதல் நாம் பூசித்த மந்திரங்கள் எல்லாம் விந்து தத்துவத்தில் ஒடுக்கப் பட்டிருக்கையால் அம் மந்திரங்கள் பிரகாசம் இன்றிக் குரூரமாய் இருக்கிற பூதம் முதலிய விக்னங்களாலே தடைப்பட்டுப் போக மோக்ஷங்களைக் கொடுக்க மாட்டா. ஆதலால் அம் மந்திரங்கள் தடையின்றிப் பிரகாசிக்கும் பொருட்டு இலிங்கத்தை அத்திர மந்திரத்தாலும், பிடத்தை பாசுபதாத்திரத்தினுலும் அபிஷேகம் பண்ணினுல் சகல விக்னங்களும் தீர்ந்து அம் மந்திரங்கள் பலனைக் கொடுக்கும். இவ்வைந்து சுத்திகளையும் உபதேச முறையானே தெளிவாக உணர்ந்து கொள்க.

---

(தொடரும்)

# பெரிய புராணம் தரும் பேரமுதம்

வெண்பாலூர், திரு. பே. திருஞானம் அவர்கள்.
தலைமையாசிரியர், பாரதி உயர்நிலைத் தொடக்கப்பள்ளி,
கள்ளகுளத்தூர். மயிலம் (அஞ்சல்.)

நாள் முழுதும் உழைத்தாலும் நமக்குச் சிறு நேரமுண்டு. அந்தச் சிறு நேரமதில் அகமுருக்கும் நூல்களினை அமைதியுடன் படித்தல் வேண்டும். அருள்நிறையப் பெறுதல் வேண்டும். நாயன்மார்கள் நவின்றருளிய நல்லுரைகளை நாடோறும் பயிலுதல் வேண்டும்.' பயன்பெற வேண்டும்.

இத்தொடரில் மூன்றாவதாக அமைந்த நூல் பெரியபுராணமாகும். இதனைப் பற்றி இவண் அறிவாம். பல்லோராலும் போற்றப்படும் நம் வண்டமிழாம் தண்டமிழ் மொழியில் எல்லோராலும் ஏற்கக் கூடிய இனிய கருத்துக்கள் இருக்கின்றன. ஏதோ சிலரால் ஏற்கப்படவில்லை என்ற காரணத்திற்காகக் கருத்துக்கள் இல்லை என்று இயம்பிவிட முடியாது; அவர் தம் நுண் மாண் நுழைபுலந்தான் என்னே என்று விடுக.

திருக்குறளை அளித்த தமிழ் மொழி பெரியபுராணம் என்ற ஒரு நூலினையும் தமிழகத்துக்கு வழங்கியுள்ளது, தமிழகமும் தமிழ் மக்களும் செய்த தவப்பேறேயன்றி வேறன்று. இத்துணைச் சிறப்பினை நல்கிய நந்தமிழுக்கும், தமிழ்த் தெய்வத்துக்கும் என்றும் கடப்பாடுடையவர்களாக இருக்க வேண்டும். இதுதான் நாட்டிற்கும், மொழிக்கும் இறைவனுக்கும் செய்ய வேண்டிய தலையாய பணியாகும். அடுத்து நூலுக்கு வருவாம்.

பெரியபுராணம் என்பது பெருமையுற்ற சிவனடியார் தம் வரலாற்றைச் சிந்தை இனிக்கவுரைக்கும் நூல். இதற்குத்-

'திருத்தொண்டர் புராணம்' என்ற வேறு பெயரும் உண்டு. எழுபத்திரண்டு நாயன்மார்களைப் பற்றிக் கூறுகிறது இந்நூல்.

அம்பலவாணர் அடியெடுத்துக் கொடுக்க அத்துவித நிலையிலே ஞானக் கண்ணாலே கண்டறிந்து உலகெலாம் என்று இப்புராணத்தைத் தொடங்குகின்றார் ஆசிரியர். திருத்தொண்டத் தொகை, திருத்தொண்டர் திருவந்தாதி, மூவர் தேவாரம், காரைக்காலம்மையார் பிரபந்தங்கள், திருமந்திரம், பொன் வண்ணத்தந்தாதி முதலியன பெரிய புராணம் இயற்ற ஆதாரமாயிருந்தனவாகும்.

இருபெருங் காண்டங்களாகப் பகுக்கப் பட்டுள்ள இந்நூல் ஒரு தனித்தமிழ்க் காப்பியமாகும். அன்பின் பெருமை, பத்திச் சுவை காவியச் சுவை, இலக்கியச் சுவை இன்னபிறயாவும் இந் நூலில் அமைந்துள்ளன. சைவமும், தமிழும் நம்மிரு கண்களென்று உள்ள நமக்கு இந்நூல் ஓர் அமுதக் குடமென்றே சொல்லலாம். யாவரும் பருகலாம்.

சைவத் திருமுறைகள் பன்னிரண்டினுள் இது பன்னிரண்டாவது திருமுறையாகும்; சைவத் திருமறையாகும். இதுகாறும் நூல்பற்றி யறிந்தனம். இனி ஆசிரியர் தம் வரலாற்றை நோக்குவாம். பெரிய புராணத்தை இயற்றியவர் தெய்வச் சேக்கிழார் பெருமானுவார்.

*தீயவற்றைக் கனவிலும் நினையாது அத்துணைத் தூய்மையான மக்களைக்கொண்ட தொண்டை நாட்டின் தன்மையைப் பற்றிக் குறிப்பிட முடியுமோ என்று சேக்கிழார் பெருமான் குறிப்பிட்டுள்ளார். இருபத்து நான்கு கோட்டங்களையுடைய தொண்டை நாட்டில் குன்றத்தூர் வளநாடு உளது. இதுவே, ஆசிரியர் தம் பிறந்த ஊராகும். இவருக்குத் தம்பி யொருவர் இருந்தார். சேக்கிழார் பெருமானுக்கு இளமையில் அருண்மொழித் தேவர் என்ற வேறு பெயரும் இருந்தது. குலவிளக்காய், மரபுப் பெயராகிய சேக்கிழாரையே நம்மாசிரியருக்கு வைத்து

---

* தீய என்பன கனவிலும் நினைவிலாச் சிந்தைத்
தூய மாந்தர்வாழ் தொண்டைநாட் டியல்புசொல் வரைத்தோ.

விட்டார்கள்: இவர் வாழ்ந்தது குலோத்துங்கன் II (அநபாய சோழன்) காலத்தில். அநபாய சோழரிடம் அமைச்சராக இருந்தார். குன்றத்தூரிலே சிவாலயம் கட்டித் திருநாகேச்சுரம் என்று பேரிட்டார். தமக்கிருந்த நிலத்தைப் பூசைக்காக எழுதிவைத்தார் சேக்கிழார்.

ஆசிரியர் வாழ்ந்த காலத்தில் 'சீவகசிந்தாமணி'யைப் பலரும் விரும்பிப் படித்தார்கள். அதுபோலவே அநபாய சோழரும் அதனை விரும்பிப் படித்தார். மன்னனைத் திருத்துதல் மந்திரியின் கடனன்றோ? அது போன்றே, "இம்மை, மறுமை இவற்றுக் குதவாத பொய்க் கதை படித்தல் வீணே" என்று மன்னனுக்கு அறிவுறுத்தினர், நம் பெருமான். இதனைக் கேட்ட அரசன், "அவ்வாறாயின் உண்மைநூல் யாது?" என்று விளம்பினர். அநபாய அரசன் இவ்வாறு கேட்ட பின்பே சேக்கிழார் பெருமான் பெரிய புராணம் பாட வாரம்பித்தார். வரலாறு இதுவே.

மெய்ப்பொருள் நாயனர் பற்றியறிவோம். சிவனுக்குரிய அடையாளங்கள் திருநீறு, காவியுடை உருத்திராட்சம் முதலியனவாகும். இவற்றை உண்மைப் பொருளென உணர்ந்து ஒழுகி வருகின்ற அடியார்களிடத்து மிகுதியான அன்பு கொண்டமையால் மெய்ப்பொருள் நாயனர் என இவருக்குப் பெயர் ஏற்படலாயிற்று.

நாமிவண் எடுத்துக் கொண்டது, நூலில் முதற்காண்டத்திலே, இரண்டாம் தில்லைவாழ் அந்தணர் சருக்கத்தில் ஐந்தாவதாக அமைந்ததாகும்.

சேதி என்றொரு நாடுண்டு. அந்நாட்டில் தலைசிறந்து விளங்கிய நகரம் திருக்கோவலூராகும். அதனைத் தலைநகராகக் கொண்டு நம் நாயனர் மலையமானுட்டை ஆண்டு வந்தார். சிவபெருமான்மீது அவருக்கு அளவிலாக் காதலுண்டு. சிவபெருமானுக்காகத் திருவிழா, வழிபாடு முதலியவற்றிற்காகத் தாம் தேடிய பொருள்களனைத்தும் ஈந்து வந்தார். சிவனடியார் மீது பேரன்பு கொண்டார். அவர்களுக்கு வேண்டியன அளிப்பதில் சிறிதும் தயங்கார்.

நாயனுர் இத்தனைச் சிறப்போடு ஆட்சி புரிந்து வருங்காலை முத்தநாதன் என்னுமரசன் இவர்பால் பகைமை கொண்டான். பல முறை போரில் வெற்றி கொள்ள முயன்றும் இறுதியில் தோல் வியே அடைந்தனன். தனது பலத்தால் நாயனுரை வெல்ல இயலாது என்பதை யறிந்து நாயனுர் எவற்றின் மேல் மிகுந்த பற்றினை வைத்திருக்கிருர் என்பதை யறிந்து கொண்டனன். நாயனுர் தான் சிவனடியார்களிடத்துப் பேரன்பு கொண்டவரா யிற்றே! வஞ்சக நினைவினனுய்க் கள்ளச் சிந்தனையாய்ப் பொய்த் தவவேடங் கொண்டு, வென்றுவிடக் கருதினுன். திருநீறணிந்து கொண்டு, சடைமுடியோடு வாளைப் புத்தகக் கவளியில் வைத்துக் கொண்டு நாயனுரின் அரண்மனை வாயிலை அணுகினுன் முத்த நாதன். ஆள் வருவதை யறிந்த அரண்மனை வாயில் காவலன் தத்தன், "அரசர் நித்திரையிலிருக்கின்ருர்; காலமறிந்துசெல்க!" என்ருன், முத்தநாதனிடம்.

" அரசருக்கு வீடு பேற்றை யளிக்கக் கூடிய ஓர் உறுதிப் பொருளை நவில இவண் போந்துள்ளேன். தடை செய்யற்க! தடை செய்வது நன்றன்று!" என்று கூறினுன் முத்தநாதன். இவ்வாறு கூறியதைக் கேட்ட வாயிற்காவலன் முத்த நாதனுக்கு வழி விட்டு விட்டான். அரண்மனைக்குள் சென்று விட்டான் முத்தநாதன். நாயனுரைக் காணும் போது அவர் உறங்கிய வண்ணமிருந்தார். —— (வளரும்)

# பாட்டியல்

மதுரகவி மரபினர்,
திரு. T. N. N. கவிக்குஞ்சரப் பாவலர் அவர்கள்,
மெயின்ரோடு, வாளாடி P. O. திருச்சிராப்பள்ளி.

[மலர் 13, இதழ் 3-ன் தொடர்ச்சி]

நாட்பொருத்தத்திற்கு உதாரணம் 1.

சு. சூ. செ. சே. சை. என்னும் ஐந்து எழுத்துக்களுள் ஒன்றைப் பெயரின் முதலெழுத்தாக உடையவர்கட்கு உரிய நாள்அசுபதி.

அசுபதிக்கு உரிய இராசி மேடம்.

அசுபதி நாளுடையாரைப் பாடவிரும்பின் அசுபதி தொடங்கி இருபத்தேழு நாட்களையும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்து பொருத்தம் அமைத்தல் வேண்டும். வருமாறு:

| முதற்கூறு. | இரண்டாங்கூறு. | மூன்றாங்கூறு. |
|---|---|---|
| 1 அசுபதி × | 1 மகம் × | 1 மூலம் × |
| 2 பரணி | 2 பூரம் | 2 பூராடம் |
| 3 கார்த்திகை × | 3 உத்திரம் × | 3 உத்திராடம் × |
| 4 உரோகிணி | 4 அத்தம் | 4 திருவோணம் × |
| 5 மிருகசிரிடம் × | 5 சித்திரை × | 5 அவிட்டம் × |
| 6 திருவாதிரை | 6 சுவாதி | 6 சதையம் |
| 7 புனர்பூசம் × | 7 விசாகம் × } இட்டை ராசியின் நாட்கள் | 7 பூரட்டாதி × |
| 8 பூசம் | 8 அனுடம் × | 8 உத்திரட்டாதி |
| 9 ஆயில்யம் | 9 கேட்டை × | 9 ரேவதி |

× இக் குறியிட்டவை பொருந்தாத நாட்கள். ஏனைய நாட்கள் பொருந்துவனவாம்.

பொருந்தும் நாட்களுக்குரிய எழுத்துக்கள் :

பரணிக்குரிய எழுத்துக்கள் : சொ. சோ. சௌ. உரோகிணிக்குரிய எழுத்துக்கள் வ. வா. வி. வீ. இஃதொப்ப ஏனைய நாட்களுக்கும் (மலர் 13. இதழ் 2-ல் கண்டு கொள்க.)

ஈண்டு எடுத்துக் காட்டிய பொருந்தும் நாட்களுக்கு உரிய எழுத்துக்களில் ஒன்றை அடுத்துக் கூறப்புகும் பொருத்தங்கட்கியைய ஆய்ந்து கோடல் வேண்டுமென அறிக.

விளக்கம் 1.

இரண்டாம் கூற்றின்கண் எட்டாம் நாளாக விளங்கும் அனுடமும், ஒன்பதாம் நாளாக விளங்கும் கேட்டையும், மேட இராசிக்கு அட்டம இராசி நாட்களாய் இருத்தலான் அவை பொருந்தா எனக் கொள்க.

அசுபதி நாள் மேட இராசியின்கண் உள்ளது. இம்மேட இராசிக்கு எட்டாம் இராசி விருச்சிகம். (மேடம் 1. இடபம் 2. மிதுனம் 3. கடகம் 4. சிம்மம் 5. கன்னி 6. துலாம் 7. விருச்சிகம் 8. என எண்ணுக)

அனுடம், கேட்டை என்னும் இவ்விரு நாட்கள் விருச்சிக இராசியின் கண் உள்ளதை இராசிகளில் விண்மீன்கள் நிற்கும் நிலை விளக்கத்துள் (மலர் 13 இதழ் 1 பக்கம் 106-ல்) காண்க.

விளக்கம் 2 :

மூன்றும் கூற்றின்கண் நான்காம் நாளாக அமைந்த திருவோணம் அசுபதிக்குஇருபத்திரண்டாம் நாளாக (வைநாசிக நாளாக) அமைந்திருப்பதால் பொருந்தாத நாளாயிற்று.

### மூன்றுங்கூற்றின் கருத்து வேற்றுமை.

"மூன்றும் ஒன்பதின் முன்றைந் தேழும்
பொருந்து மென்று புகலுவர் புலவர்."

என்னும் சூத்திரத்தைச் சிலர் எடுத்துக் காட்டி மூன்றும் கூற்றின் கண் உள்ள மூன்றும் நாளும், ஐந்தாம் நாளும், ஏழாம் நாளும் பொருந்து மென்றும், இஃது விட்ட பொருத்தமென்றும் கூறுவர்

அங்ஙனம் கூறுவதைப் பொருந்துவதாகக் கொள்ளின் அசுபதி 2, 3, 4 ஆம் கால்கட்கு மூன்றும் கூற்றின் ஐந்தாம் நாளாக அமைந்த அவிட்டம் எண்பத்தெட்டாங்காலாய் (வைநாசிகக்காலாய்) அமைந்து குற்றமுடைத்தாகின்றது. ஆகையால் அச்சூத்திரத்தின் கருத்துப் பொருந்துமாறில்லையென அறிக.

இச்சூத்திரம் இந்திரகாளியத்தின் பெயரால் பின் உள்ளோர் செய்த இடைச் செருகலேயாம். எந்நாளை எடுத்துக்கொண்டாலும், அந்நாளின் 2, 3, 4. ஆம் கால்கட்கு மூன்ருவது கூற்றின் ஐந்தாம் நாள் வைநாசிகக்காலாகிய எண்பத்தெட்டாங்காலாய் வருமாகையான் அவர்தம் கூற்றுப் பொருந்தாத கூற்றேயாம்.

இங்ஙனம் மூன்று கூறுகள் செய்வதை வட நூலார் சன்மம், அனுசன்மம், திரிசன்மம் என வழங்குவர்.

ஒவ்வொரு கூற்றிலும் உள்ள ஒன்று, மூன்று, ஐந்து, ஏழாம் நாட்கட்கு முறையே சூரியன், இராகு, கேது, சனி ஆகிய தீக்கோள்கள் அதிபராக உள்ளதால் அந்நாட்கட்குரிய எழுத்துக்களில் ஒன்றை முதற்பாட்டின் முதலெழுத்தாக அமைத்தால் பாட்டுடைத் தலைவனுக்குத் தீமை பயக்கு மாகையான் அந்நாட்கள் பொருந்தா எனச் சுருக்கிக் கூறினர்.

## உதாரணம். 2.

சொ. சோ. சௌ. என்னும் மூன்றெழுத்துக்களுள் ஒன்றைப் பெயரின் முதலெழுத்தாக உடையவர்கட்கு உரியநாள் பரணி.

### இராசி மேடம்

| முதற்கூறு. | இரண்டாங்கூறு. | | மூன்றாங்கூறு. |
|---|---|---|---|
| 1 பரணி × | 1 பூரம் × | | 1 பூராடம் × |
| 2 கார்த்திகை | 2 உத்திரம் | | 2 உத்திராடம் |
| 3 உரோகிணி × | 3 அத்தம் × | | 3 திருவோணம் × |
| 4 மிருகசிரிடம் | 4 சித்திரை | | 4 அவிட்டம் × |
| 5 திருவாதிரை × | 5 சுவாதி × | | 5 சதையம் × |
| 6 புனர்பூசம் | 6 விசாகம் × | | 6 பூரட்டாதி |
| 7 பூசம் × | 7 அனுடம் × | அட்டம ராசியின் நாட்கள் | 7 உத்திரட்டாதி × |
| 8 ஆயில்யம் | 8 கேட்டை × | | 8 இரேவதி |
| 9 மகம் | 9 மூலம் | | 9 அசுபதி |

× இக்குறியிட்டவை பொருந்தாத நாட்கள். ஏனைய நாட்கள் பொருந்துவனவாம்.

பரணி நாளுடையார்க்கு பரணி தொடங்கியே இருபத்தேழு நாட்களேயும் ஒன்பது ஒன்பதாக மூன்று கூறுகள் செய்து காட்டியுள்ளதை ஓர்க.

இக்கூறுகளின் விளக்கம் அசுபதி நாளுக்குக் கூறிய விளக்கத்திற் கிணங்கக் கண்டுணர்க.

## உதாரணம் 3.

அ. ஆ. இ. ஈ. என்னும் நான்கெழுத்துக்களுள் ஒன்றைப் பெயரின் முதலெழுத்தாக உடையவர்கட்கு உரிய நாள் கார்த்திகை.

கார்த்திகை 2, 3, 4 ஆம் கால்கள் இடப இராசி

| முதற்கூறு. | இரண்டாங்கூறு. | | மூன்றாங்கூறு. |
|---|---|---|---|
| 1 கார்த்திகை × | 1 உத்திரம் × | | 1 உத்திராடம் × |
| 2 உரோகிணி | 2 அத்தம் | | 2 திருவோணம் |
| 3 மிருகசீரிடம் × | 3 சித்திரை × | | 3 அவிட்டம் × |
| 4 திருவாதிரை | 4 சுவாதி | | 4 சதையம் × |
| 5 புனர்பூசம் × | 5 விசாகம் × | மேடத்தில் அட்டம இராசிநாட்கள். | 5 பூரட்டாதி × |
| 6 பூசம் | 6 அனுடம் × | | 6 உத்திரட்டாதி |
| 7 ஆயில்யம் × | 7 கேட்டை × | | 7 இரேவதி × |
| 8 மகம் | 8 மூலம் × | இடபத்தில் அட்டம ராசி நாட்கள். | 8 அசுபதி |
| 9 பூரம் | 9 பூராடம் × | | 9 பரணி |

× இக்குறியிட்டவை பொருந்தாத நாட்கள். ஏனைய நாட்கள் பொருந்துவன.

முன்காட்டிய உதாரணங்களில் கூறுத விளக்கம் வருமாறு :—

கார்த்திகை முதற்காற் குரிய எழுத்து இஃதென்றும், 2, 3, 4 ஆம் கால்கட்கு உரிய எழுத்துக்கள் இவை என்றும், பாட்டியலார் கூருமையானும், கார்த்திகை நாள் மேடத்திற்கும்

இடபத்திற்கும் உரியதாய் இருத்தலானும், இருராசியின் அட்டம இராசி நாட்களும் பெயர் நாளுக்குப் பொருந்தா எனக்கூறப் பட்டது.

கார்த்திகை நாளுக்குரிய எழுத்து நான்காக இருப்பதால் இந்நான்கு எழுத்துக்களையும் முறையே நான்கு கால்களாகக் கொள்ளலாமெனினும், அஃதும் பொருந்து மாறில்லை.

என்னை? யெனின், கார்த்திகை நாளுக்குச் சொல்லியவாறே ஏனைய நாட்களுக்கும், நான்கு, நான்கு எழுத்துக்களாகக் கூறி யிருப்பின் ஒவ்வொரு காற்கும் ஒவ்வொரு எழுத்தாகக் கோடல் இயலும்.

அங்ஙனம் கூறுது, ஒரு நாளுக்கு ஓர் எழுத்தும், மற்றொரு நாளுக்கு ஈரெழுத்தும், பிறிதொரு நாளுக்கு ஏழு எழுத்துமாகக் கூறியிருத்தலான் ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு காலமாகக் கோடல் பொருந்தாமை அறிக.

ஈண்டு விளக்கிய மூன்று உதாரணங்களைக் கொண்டு ஏனைய நாட்களுக்கும் பொருத்தம் அமைத்துக் கொள்க.

இனி, உண்டிப் பொருத்தம் என்பதைப் பற்றிக் கூறுவாம்.

(தொடரும்)

---

# 'திருமுறை வெளியீடுகள்'



| | | ரூ. ந. பை |
|---|---|---|
| 1 | விநாயகர் திருமுறை ... | 0 06 |
| 2 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பிரபந்தத்திரட்டு டாக்டர் சாமிநாத ஐயர் குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) ... | 3 50 |
| 3 | சிவக்கொழுந்து தேசிகர் பிரபந்தம் ... | 3 00 |
| 4* | திருஞானசம்பந்தர் தேவாரம் (மூலம்மட்டும்) (புதிய பதிப்பு) ... | 2 75 |
| 5* | திருநாவுக்கரசர் தேவாரம் „ „ ... | 2 00 |
| 6* | சுந்தரர் தேவாரம் (புதிய பதிப்பு) „ ... | 1 30 |
| 7* | திருவாசகம் (அச்சில்) | |
| 8* | திருக்கோவையார்-பேராசிரியர் உரையும் பழையவுரையும் (புதிய பதிப்பு) ... | 2 90 |
| 9 | ஒன்பதாம் திருமுறை-திருவிசைப்பாவும் திருப்பல்லாண்டும் (மூலம்மட்டும்) ... | 0 56 |
| 10* | திருமந்திரம் „ (புதிய பதிப்பு) ... | 2 25 |
| 11 | பதினோராந்திருமுறை „ ... | 1 25 |
| 12 | அம்மையார் அற்புதத் திருவந்தாதி (புதிய பதிப்பு) ... | 0 25 |
| 13 | திருக்கைலாயஞானவுலா - உரையுடன் ... | 0 50 |
| 14 | பெரிய புராணம் (மூலம்மட்டும்) ... | 2 50 |
| 15* | அகத்தியர் தேவாரத்திரட்டு ... | 0 37 |
| 16 | திருவிளையாடற் புராணம் (மூலம்மட்டும்) ... | 3 00 |
| 17 | தாயுமான சுவாமிகள் பாடல்-குறிப்புரையுடன் (அச்சில்) ... | |
| 18 | கந்தபுராணச் சுருக்கம் (மூலம்மட்டும்) ... | 1 75 |
| 19 | கந்தபுராணம் — முதல் மூன்று காண்டங்கள் „ ... | 2 75 |
| 20 | „ யுத்த தேவகாண்டம் „ ... | 2 00 |
| 21 | „ தக்ஷகாண்டம் „ ... | 1 50 |
| 22 | கந்தபுராண வசனம் (அச்சில்) | |
| 23 | கந்தர் அலங்காரம் - குறிப்புரையுடன் ... | 0 25 |
| 24 | கந்தரனுபூதி ... | 0 13 |
| 25 | கந்தர் கலிவெண்பா — ஆங்கிலம் ஹிந்தி மொழி பெயர்ப்புக்களுடன் ... | 0 37 |
| 26 | கந்தர் கலிவெண்பா - மூலம் மட்டும் ... | 0 06 |
| 27 | கந்தர் கலிவெண்பா - மூலமும் — உரையும் ... | 0 37 |
| 28 | நீதிநெறி விளக்கம்-ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை — ஆங்கிலமும் ஹிந்தியும் கூடியது ... | 0 06 |
| 30 | சிவஞான சித்தியார், ஹிந்தி மட்டும் ... | 1 00 |
| 31 | திருக்குறள் - அறத்துப்பால் மூலமும் குறிப்புரையும் ஹிந்தி மொழி பெயர்ப்பும் ... | 1 50 |
| 32 | திருக்குறள் - பொருட்பால் „ ... | 2 50 |
| 33 | திருக்குறள் — காமத்துப்பால் „ ... | 1 00 |
| | ஷை 31, 32, 33 திருக்குறள் 3 புத்தகமும் ... | 4 00 |

Registered with the Registrar of Newspapers for India
Under No. R. No. 1485/57.
Regd No. M. 5574 

| | | |
|---|---|---|
| 34 | திருக்குறள் மூலமும் குறிப்புரையும் | ... 0 75 |
| 35 | திருக்குறள் - பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் | ... 0 1[illegible] |
| 36 | முதுமொழி மேல் வைப்பு (குறிப்புரையுடன்) | ... 0 75 |
| 37 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் | ... 0 37 |
| 38 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சி யம்மை பிள்ளைத்தமிழ் - மதுரைக் கலம்பகம் - நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை- மதுரை மீனுட்சியம்மை குறம் | ... 2 75 |
| 39 | திருவாரூர் நான்மணிமாலை – முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் | ... 1 25 |
| 40 | சிதம்பர மும்மணிக்கோவை - சிதம்பரச் செய்யுட்கோவை- தில்லைச் சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... 1 00 |
| 41 | பண்டார மும்மணிக் கோவை – காசிக் கலம்பகம் – சகலகலாவல்லி மாலை | ... 1 00 |
| 42 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... 0 75 |
| 43 | முத்துக்குமாரசாமி பிள்ளைத்தமிழ் | ... 0 50 |
| 44 | தமிழிசைப்பாக்கள் [அச்சில்] | |
| 45 | பெரியபுராணம் – உரைநடை | ... 2 00 |
| 46 | திருவிளையாடற் புராணம் – உரைநடை | ... 2 25 |
| 47 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கங் களும் கந்தர்கலிவெண்பா விளக்கப்படங்களும் | ... 0 50 |
| 48 | அபிராமி பட்டர் பிரபந்தம் (மூலம்மட்டும்) (அச்சில்) | ... |
| 49 | திருக்கயிலைத் திருமுறை | ... 0 37 |
| 50 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... 0 19 |
| 51 | செந்திலாண்டவன் மகிமை | ... 0 13 |
| 52 | திருக்குறள் - உரைக்கொத்து - அறத்துப்பால் 3-ம் பதிப்பு | ... 1 37 |
| 53 | ஷை ஷை பொருட்பால் 2-ம் பதிப்பு | ... 2 75 |
| 54 | ஷை ஷை காமத்துப்பால் ஷை | ... 1 20 |
| 55 | அபிராமி அந்தாதி – தெளிவுரையுடன் | ... 0 50 |
| 56 | மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ் (குறிப்புரையுடன்) | ... 0 50 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள்:-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோயில், ஸ்ரீவைகுண்டம்.
2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
"நியாகராஜ விலாசம்" 53, பிள்ளையார் கோயில்தெரு, திருவட்டீஸ்வரன்பேட்டை, திருவல்லிக்கேணி, சென்னை - 5.

குறிப்பு:- * இக்குறியிடப் பெற்றவற்றின் விற்பனைத் தொகை ஸ்ரீலஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களால் நிறுவப்பெற்ற பன்னிரு திருமுறைப்பதிப்பு நிதியைச்சாரும். மற்ற நூல்களில் திருக்குறள் உரைக்கொத்து (எண் 52, 53, 54) தவிர்த்து எஞ்சியவற்றின் விற்பனைத்தொகை 'குமரகுருபரன்' பத்திரிகையைச்சாரும்,

அச்சிட்டது:— குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம் – '62